தேர்தல் வெளியீடு

# சிட்டகாங் வீரர்கள்

(நான் எப்படி கம்யூனிஸ்டு ஆனேன்?
என்ற கட்டுரையும் அடங்கியுள்ளது)




6

ஆசிரியை : கல்பனா தத்

மொழிபெயர்ப்பு : வெ. ராமசாமி

வெளியிடுவோர் :

**இந்தியக் கம்யூனிஸ்டு கட்சி**

தமிழ்நாடு கமிட்டி

1/6, டேவிட்ஸன் தெரு, ஜி. டி., சென்னை.

ஜனவரி 1946] [விலை அணா 4.

# முன்னுரை

◆◆◆◆

சிட்டகாங் ஆயுத தளவாடசாலை சூறையாடப்பட்டது. சுதந்திரத்தை நோக்கி நம் நாடு முன்னேறிச் செல்லும் பாதையில் இந்த நிகழ்ச்சி உணர்ச்சி யூட்டக்கூடிய மகத்தான நிகழ்ச்சி இந்தப் புத்தகத்தில், ஆயுதச் சாலையைத் தாக்கிய வீரர்களைப்பற்றி அதே தாக்குதலில் பங்கெடுத்துக் கொண்டவரான **கல்பனு தத்** தினுல் எழுதப்பட்டக் கட்டுரைகள் அடங்கியிருக்கின்றன. இதைப் படிப்பதால் அவர்கள் ஒவ்வொருவரையும் நாம் நேசிக்க ஆரம்பிக்கிறோம்; நம் தேசபக்தியையே தீட்டிக் கூர்மையாக்குகிறோம்; நம் புராதன தேசத்தின் எதிர்கால சுபிட்சத்தில் அளவு கடந்த நம்பிக்கையை வைக்க ஆரம்பிக்கிறோம். அவர்கள் வங்க மத்தியதர வர்க்கத்தில் உதித்த இளைஞர்கள்; வாலிபர்கள்; வயதான மனிதர்கள். நாம் போற்றிப் புகழும் நற்குணங்களே உருவமெடுத்து வந்தாற்போல் அவர்கள் திகழ்ந்தார்கள்; நம்மில் வெகு சிலருக்கே உள்ள உன்னத தைரியத்துடன் அவர்கள் போராடினுர்கள். கல்பனு தத் தன்னுடைய சொந்த அனுபவங்களிலிருந்து சுற்றி வளைக்காமல் தெளிவாக எழுதுகிறார். எந்த லக்ஷியம் அவர்களுக்கு உணர்ச்சியூட்டி ஊக்க மூட்டியது? எந்த லக்ஷியம் அத்தகையத் தோழமைக் கட்டினுல் அவர்களைப் பிணைத்துவளர்த்தது? இதையெல்லாம் கல்பனு தத் தெளிவாகக் கூறுகிறார். இந்த நினைவுத் திரட்டைப் படிப்பதால், அந்த கோஷ்டிகளின் தலைவர்கள் ஏன் புராண இதிகாசங்களில் வரும் பெயர்களைப்போல் ஜனங்களிடையே பேசப்படுகின்றனர் என்பதையும், எப்படி அவர்களுடைய பெயர் ஒவ்வொரு வீட்டிலும் மரியாதையுடன் உச்சரிக்கப்படும் பெயராக இருக்கிறது என்பதையும் அறிந்து கொள்ளலாம்.

கல்பனு தூக்கிலிடப்படுவதற்கிருந்தார். சின்னஞ்சிறு சிறுமியாக இருந்ததனுலேயே அவருடையத் தூக்கு தண்டனை ரத்து செய்யப்பட்டது. நம் பிரிட்டிஷ் அதிகாரவாக்கம் அவரை ஆயுள் பூராவையும் சிறையில் கழிக்கும்படி தண்டனையை மாற்றியது. ஆனுல் நம் ஜனங்கள் அவருடைய விடுதலையைப் பெற்றனர். சின்னஞ்சிறு சிறுமியாக சிறைக்குச் சென்ற அவர், ஆறு வருடங்கள் சிறையில் கழித்தப்பிறகு, யௌவன ஸ்திரியாக வெளியே வந்தார்.

வேலை செய்யும்போதே எப்படி கொஞ்சம் கொஞ்சமாக நம் கட்சியால் ஆகர்ஷிக்கப்பட்டார் என்பதை இதில் அவர் வர்ணிக்கிறார். அவருடைய சொந்த வாழ்க்கையைப் படிப்பது நம் தேசிய இயக்கத்தில் ஜீவனுள்ள ஒரு கட்டத்தைப் படிப்பதாகும். எப்படி ஆரம்ப பயங்கரவாதக் கைதிகள் கம்யூனிஸ்டுகளாக மாறினார்கள் என்பதை அறிந்துகொள்வதாகும். அவர்கள் நம் கட்சியின் கொடியின்கீழ் வந்தது சுலபமான, அதே சமயத்தில் கடினமான ஒரு காரியம், சுலபமானது, ஏனெனில் நம் கட்சியின் கொள்கையிலும் நடைமுறைத் திட்டத்திலும் தங்களுடைய புரட்சிகரமான போராட்டக் கனவுகளை இன்னும் தெளிவான விஞ்ஞான முறையில் வகுக்கப்பட்டதாகக் கண்டார்கள். கடினமானது. ஏனெனில் தாங்கள் கொண்டிருந்த பிரமைகளையெல்லாம் ஒழித்துவிட்டு தாங்கள் செய்தவற்றில் என்னென்ன தவறுகளைச் செய்தார்கள், எதெதில் தங்களைத் திருத்திக்கொள்ளவேண்டும், தாங்கள் வாழ்க்கையையே அர்ப்பணம் செய்திருக்கும் தேசத்தின் சுதந்திரப் போராட்டத்திற்காக எவ்விதம் தொடர்ந்து போராடுவது என்பனவற்றைப்பற்றி தாங்களே அலசி ஆராய்ந்து முடிவிற்கு வரவேண்டியிருந்தது. அவர்களுடைய அனுபவங்களால் முதிர்ந்த வயதில் கம்யூனிஸத்தின், குழந்தைப் பருவமாக எப்படி பயங்கரவாதம் இருந்தது என்பதை இந்த நினைவுத் திரட்டிலிருந்து அறிந்துகொள்ளலாம்.

சிட்டகாங் ஆயுத களவாடச்சாலை தாக்குதலில் பங்கெடுத்துக் கொண்டதினால் இன்று சிறைகளில் வாடும் தலைவர்களும் சரி, சிறைக்கு வெளியில் இருக்கும் அவர்களுடைய சிஷ்யர்களும் சரி இன்று அநேகமாக நம் கட்சியில் இருக்கிறார்கள், ஆகவே, இன்றைக்கு சிட்டகாங் வாசி ஒவ்வொருவனும் "சூர்யா சென்னின் பரம்பரை" என்றும், "சிட்டகாங் பரம்பரை" என்றும் எதைக் குறித்து பெருமையுடன் பேசுகிறானோ, அதன் சரித்திரப் பூர்வமான வாரிசே எங்கள் கட்சி.

சிட்டகாங்கிலுள்ள ஒவ்வொரு வீட்டிலும் கல்பனா தத்திற்குக் கொடுக்கப்பட்டிருக்கும் செல்லப் பெயர் "**அமர்மயி**" அதாவது 'நம்ம பெண்" என்று அர்த்தம். இந்த சிட்டகாங்கின் புத்திரி திரும்பவும் தன்னுடைய பெற்றோர்களான சிட்டகாங் மக்களின் தீர்ப்பைப் பெறுவாள். வருகிற மாகாண தேர்தலில் கம்யூனிஸ்ட் அபேக்ஷகராக நிற்கிறாள்.

**பி. ஸி. ஜோஷி.**

# முகவுரை

(சிட்டகாங் வீரர்களின் சரித்திரத்தை எழுதுவதற்கு முன்பு சிட்டகாங் சதிகளைப்பற்றி கல்பனா தத் எழுதிய முகவுரை.)

............

சூர்யா சென், அனந்த சிங், கணேஷ் கோஷ், சிட்டகாங்கைச் சேர்ந்த இன்னும் இதர புரட்சித் தலைவர்கள் வெறுக்கத்தக்க அந்த வங்காள அவசரச் சட்டத்தின் கீழ் காவற் கைதிகளாக வைக்கப்பட்டார்கல்லவா? இதிலிருந்து 1928ல் அவர்கள் விடுதலை பெற்று சிட்டகாங்குக்குத் திரும்பிவந்தார்கள்.

திரும்பியதும், அவர்கள் மனதில் எழுந்த முதல் எண்ணம் நாட்டை விடுதலை செய்வது எப்படி, கையாளும் வழி என்ன என்பதேயாகும்.

வெளியிலிருந்து ஒரு வல்லரசின் உதவியைப் பெருமல் இந்தியாவைச் சுதந்திர பூமியாக்க முடியாது; இப்படித்தான் பயங்கரவாதத்தில் தேய்ந்திருந்த புரட்சிக்காரர்கள் எண்ணுவது வழக்கம். ஒரு சில அரசாங்க உத்தியோகஸ்தர்கள், சில ஐரோப்பியர்களையோ அல்லது போலீஸ் ஆபீஸர்களையோ, கொன்றுவிடுவதனுல் பிரிட்டிஷ் அரசாங்கத்தைத் தகர்த்துவிடமுடியாதென்று அவர்கள் ஏற்கனவே கண்டுகொண்டார்கள். அதன் விளைவாக, புரட்சிக்காரர்கள் மனமொடிந்து அவநம்பிக்கையில் மூழ்கியிருந்தார்கள். செயலிழந்து நிற்கும் இந்த நிலையைப் போக்கவேண்டுமென்று சிட்டகாங்கிலுள்ள இளம் புரட்சிகாரர்கள் விரும்பினார்கள். வெளிநாட்டு உதவியில்லாமலேயே அரசாங்கத்தோடு போராடுவது சாத்தியம் என்பதைக்காட்டித் தன்னம்பிக்கையைத் திரும்பவும் ஊட்டவேண்டுமென்பது அவர்கள் விருப்பம். இதற்கு அவர்கள் போட்டதிட்டம் என்ன? ஆயுதங்களைக்கொண்டு வெளிப்படையாகவே போர் தொடுப்பது அரசாங்க ஆயுதச் சாலையைச் சூறையாடி அங்குள்ள ஆயுதங்களைக் கைப்பற்றுவதற்கு விரிவான திட்டம் வகுத்து அதை நிறைவேற்றுவது, போக்குவரத்து சாதனங்களைச் சின்னபின்னப்படுத்தி இந்தியாவின் இதர பகுதிகளிலிருந்து அரசாங்கத்துக்கு படையும் ஆயுதமும் வராமல் தடை செய்வது, தனிப்பட்ட ஐரோப்பியர்களைத் தாக்காமல், அவர்கள் கூட்டமாகக் கூடியிருக்கும் 'கிளப்'பைச் சூறையாடி அங்கே அவர்களோடு போர்தொடுப்பது இதுதான் அவர்கள் திட்டம். ஒரு வாரத்திற்கு சிட்டகாங் சுதந்திரமாக இருக்கும்! அதன்பிறகு சிட்டகாங்கைப் பிடிப்பதற்கு அரசாங்கத்தார் துருப்புகளைக்

கொண்டுவந்தால், எதிரிக்குச் கொஞ்சம் கூட இடம்கொடுக்காமல் போராடி அவர்கள் உயிர் விடுவார்கள். குறுகிய காலத்தில் தாங்கள் காட்டிய இந்த வீரதீரச் செயல் நாடுமுழுதும் பரவி எதிரொலிக்கும். தாய் நாட்டின் சுதந்திரத்திற்காகப் போராடும்படி புதிய சந்ததியார்களுக்கு இது ஒரு ஆவேசத்தை உண்டுபண்ணும் என்று அவர்கள் எண்ணினார்கள்.

* * * *

1930-ம் வருஷம் ஏப்ரல் மாதம் 18ந்-தேதி மாலை 10 மணிக்கு தந்தி ஆபீஸ், ஆயுதச்சாலை, போலீஸ் இருக்கும் கட்டிடங்கள் இவை யாவும் ஒரே சமயத்தில் தாக்கப்பட்டன. நாங்கல் கோட், டம் என்ற இடங்களில் தண்டவாளங்களும் பெயர்க்கப்பட்டன. இந்தக் காரியங்கள் நிகழ்ந்துகொண்டிருக்கும் அதே சமயத்தில், காந்திஜி சட்டமறுப்பை உடைத்தெறியும்படி சொல்லிவிட்டார். அவர் சொற்படியே தேசத் துரோகம் என்கிற சட்டத்தை நாங்கள் தகர்த்தெறிகிறோம் என்று நகரம் முழுதும் ஒரு துண்டுப்பிரசுர மூலம் அறிவிக்கப்பட்டது. "தலைவர், இந்தியக் குடியரசுச் சேனை சிட்டகாங் வாசிகள்" என்று கையொப்பமிட்ட இன்னொரு துண்டுப் பிரசுரமும் வழங்கப்பட்டது. இப்படிச் சூறையாடுவதன் நோக்கத்தை இந்தப் பிரசுரம் விளக்கியது. பயங்கர வாதிகளின் கட்சி, **இந்தியக் குடியரசுச் சேனை**யின் கிளை என்று தனக்குப் பெயர் வைத்துக்கொண்டது. இந்தக் கிளைச் சேனைக்குத் தலைவர் சூர்யா சென்.

ஆயுதச்சாலையில் மேஜர் பெர்ரோல் கொல்லப்பட்டார். போலீஸ் படையினர் வசிக்கும் இடத்தில் இரு காவலாளர்கள் உயிர் துறந்தனர்.

ஆயுதச்சாலையும், போலீஸ் துருப்பு நிலயமும் (பாரக்ஸ்) புரட்சிக்காரர்கள் கைக்கு வந்தன. அந்த இடத்திற்குவந்த ஜில்லா மாஜிஸ்ட்ரேட்டும் சுடப்பட்டார். ஆனால் குறி தவறியது. மாஜிஸ்ட்ரேட் துறைமுகத்துக்கு ஓடி கம்பியில்லா தந்திமூலம் வெளியே செய்தியனுப்பிவிட்டு, துறைமுகத்திலுள்ள ஆயுதங்களையெல்லாம் சேகரித்து புரட்சிக்காரர்களுக்கு விரோதமாக சில துருப்புகளை அனுப்பி வைத்தார். ஆயுதச்சாலைக்கு எதிரேயுள்ள குன்றில் தண்ணீர்த் தேக்க நிலயங்கள் இருந்தன. இந்த நிலயங்களிலிருந்து அரசாங்கத்தார் எதிர்த்துத் தாக்கினார்கள். ஆனால் புரட்சிக்காரர்கள் நின்று போர்புரியும் இடம் அவ்வளவு சாதகமாக இல்லாவிட்டாலும், அரசாங்கத்தின் துருப்புகளை முன்னேற விடாமல் அவர்களால் தடுக்க முடிந்தது.

ஆனால் அந்தக் குன்றில் இனிமேல் தங்கியிருப்பது ஆபத்து என்பதை அவர்கள் கண்டு கொண்டார்கள். ஆதலால் அதை விட்டுச் செல்லுமுன் தங்களால் எவ்வளவு ஆயுதங்களை எடுத்துக் கொள்ளமுடியுமோ அவ்வளவையும் கைப்பற்றிக் கொண்டார்கள். தங்களால் எடுத்துக்கொண்டு போகமுடியாமல் விட்ட ஆயுதங்களோடு ஆயுதச்சாலைக்கு பெட்ரோலை ஊற்றி நெருப்பு வைத்துவிடுவது என்று முடிவு செய்தார்கள்.

போரின்போது ஒருவருக்குக் கூட நஷ்டமில்லையென்று இருந்த அவர்களுக்கு இப்போது ஒரு துர்சம்பவம் நிகழ்ந்தது. பெட்ரோலை ஊற்றிக்கொண்டிருந்த சமயத்தில் அவர்களில் ஒருவரான ஹிமான்சுசேன் என்பவர்மீது நெருப்புப் பற்றிக்கொண்டு உடல் முழுதும் வெந்து போய்விட்டது. இறக்கும் தருவாயிலிருந்த ஹிமான்சுசென்னை அனந்தா, கணேஷ் இன்னும் மற்றவர்களும் நகரத்திற்குத் தூக்கிச் சென்றார்கள். அங்கு தலைமறைவாக இருந்த நிலையிலேயே மூன்று நாட்கள் கழித்து அவர் உயிர் துறந்தார். இவர்களைத்தவிர எஞ்சியிருந்தோர் அனைவரும் நகரத்தின் எல்லா பாகங்களையும் தாக்குவதற்குரிய ஏற்பாடுகளைச் செய்வதற்கு குன்றுக்குப் போனார்கள். அனந்தா தாவும் அவரோடு நகரத்திற்குச் சென்றவர்களும் ஒரு வழியாகவும், கூட்டத்தில் எஞ்சியவர்கள் வேறொரு வழியாகவும் பிரிந்துசென்றது இங்கேதான்.

## ஜலாலாபாத் குன்றுப் போர்

ஏப்ரல் 22வ மாலை 4½-மணிக்கு நன்கு பலப்படுத்தப்பட்டு பூரண ஆயுதபாணிகளாயிருந்த பிரிட்டிஷ் துருப்புகளோடு புரட்சிக்காரர்கள் கை கலந்தார்கள். ஜலாலாபாத் குன்றின்மீது புரட்சிக்காரர்கள் இருந்தனர்; பிரிட்டிஷ் துருப்புகளோ அதற்கு எதிர்த்த குன்றில். பொழுது சாயும் வரையில் இந்தப் போர் தொடர்ந்து நடந்தது; ஆனால் துருப்புகள் பின்வாங்கும்படி நேர்ந்தது. இரு தரப்பிலும் பலர் கொல்லப்பட்டனர். புரட்சி மனப்பான்மையுள்ள சிட்டகாங் இளைஞர்களிடையே ஜலாலாபாத் குன்றுப் போர் எதிரிக்கு இம்மியும் விட்டுக் கொடுக்காத வீரப்போரை நிகழ்த்திய ஒரு இதிகாசமாகவே இருந்தது.

பிரிட்டிஷ் இயந்திரப் பீரங்கிகளிலிருந்து முதன்முதல் வெளி வந்த குண்டுகள் பதினொரு புரட்சிக்காரர்களைத் தாக்கின. அவர்களில் நான்கு பேர் கடுமையாகக் காயமடைந்தனர். போரில் இறந்துவிட்டார் என்று அரசாங்கத்தார் அறிவித்த அம்பிகா சக்கரவர்த்தி காயமடைந்தாரேயன்றி உயிர் துறக்கவில்லை. இந்த நிலை

யிலும், காயமடைந்த இன்னும் இரண்டு தோழர்களோடு அவர் தப்பித்துச் சென்றுவிட்டார். அர்தேந்து தாஸ்திதார் மட்டும் காயம் பட்டபடியே பிடிக்கப்பட்டு போலீஸாரின் அசுரத்தனமான சித்திரவதைகளுக்கு ஆளானர். போலீஸ் பந்தோபஸ்தில் இருந்தபடியே சில தினங்களில் அவர் உயிரையும் துறந்தார்.

அரசாங்கத் தரப்பில் எத்தனை பேருக்குக் காயம், எத்தனை பேர் மடிந்தார்கள் என்கிற புள்ளி விபரம் கிடைக்கவில்லை. 150 சிப்பாய்கள் மாண்டனர் என்று வதந்தி. திப்பெரா ஜில்லாவில் அகர்த்தோலாவிலிருந்து வந்த புதிய துருப்புகளுக்குப் படைத் தலைவனக விளங்கியவன் தாங்கள் கடுமையான நஷ்டமடைந்ததாக ஒரு ரயில்வே வேலைக்காரரிடம் உண்மையைச் சொன்னன். இரண்டு அல்லது மூன்று மாதங்களுக்குப் பிறகு கணேஷ் கோஷும், ஏனையோரும் கைது செய்யப்பட்டபோது, ஸர் சார்ல்ஸ் டெகார்ட் என்பவர், "எங்கள் 64 சிப்பாய்களைக் கொன்றவர்களல்லவா நீங்கள்" என்று அவர்களைத் தாக்கிப் பேசினராம்.

ஜலாலாபாத்தில் திடீரென்று அரசாங்கத்தாரின் தாக்குதல் நிகழ்ந்த பிறகு, நகர முழுவதையும் தாக்குவது என்ற திட்டத்தைக் கைவிடும்படி ஆயிற்று. போர் நிகழ்ந்த அன்று ஒரு புதிய முடிவு எடுக்கப்பட்டது: "நமது வேலை இன்னும் முடியவில்லை. அரசாங்கத்தோடு மேலும் போர் தொடுத்துத்தான் ஆகவேண்டும். இந்தச் சமயத்திலிருந்து கொரில்லா முறைகளைக் கையாண்டே விடுதலைப் போரைத் தொடர்ந்து நடத்துவோம். தலைமறைவாக இருப்பதன் காரணமாக ஏற்படும் கடுமையான துன்பங்களையும், கொரில்லாப் போராட்டத்தை நடத்துவதன் காரணமாக ஏற்படும் எண்ணற்ற ஆபத்துகளையும் ஏற்கத் தயாராயிருப்பவர்களே இங்கே இருக்கலாம். "திரும்பச் செல்ல நினைப்பவர்கள் இப்போதே போய்விடலாம்." மேலும் இந்த இயக்கத்தின் நன்மையை உத்தேசித்து, போலீசாரின் சந்தேகத்திற்கு இன்னும் ஆளாகாதவர்கள் அனைவரும் வீட்டுக்குத் திரும்பும்படியும் உத்திரவிடப்பட்டனர்.

இரண்டு நாள் கழித்து, ஏப்ரல் 24-ந்தேதி, நகரில் சாதர்கட்டம் என்ற இடத்தில், ஆள் நடமாட்டமில்லாத ஒரு வீட்டில் இளைஞன் ஒருவன் இருப்பதைக் கண்டு போலீசாருக்கு சந்தேகம் உதித்தது. இளைஞன் உடனே இரண்டாவது மாடியிலிருந்து கீழே குதித்து, வீதியோரத்திலுள்ள ஒரு வாராவதியின் கீழ் நின்று கொண்டான். பிறகு இரு பக்கத்திலும் துப்பாக்கியால் சுட்டனர். ஆனல் அவனுடைய துப்பாக்கியில் குண்டுகள் எல்

லாம் தீர்ந்துவிட்டன. அந்தச் சமயத்தில் இன்னொரு முனையி லிருந்து வந்த துருப்புகள் அவனைச் சுட்டுத் தள்ளினார்கள். இந்த இளைஞனின் பெயர் அமரேந்திர நந்தி. ஆயுதச்சாலை சூறை யாடிய பிறகு குன்றுக்குப் போகுமுன், அனந்த கோஷுடனும் மற்றவர்களோடும் தொடர்பு ஏற்படுத்திக்கொள்ளும் நோக்கத் துடன் தலைவர் சூர்யா ஸென் இந்த இளைஞனை நகரத்திற்கு அனுப்பிவைத்தார். தனக்குக் கொடுத்த வேலையை நிறைவேற் றிய பிறகு, திரும்பிவருங்கால், ஜலாலாபாத் சம்பவத்தைப்பற்றி அவன் கேள்விப்பட்டு, கிராமங்களுக்குச் செல்லும் ரஸ்தாவில் நடக்க ஆரம்பித்தான். ஆனால் தனது தோழர்களின் உயிரைக் குடித்தவர்களைப் பழி வாங்குகிற எண்ணத்தில் திரும்பவும் நகரத் திற்கே திரும்பினான். வழியில் தனது உயிரைப் பறிகொடுத்தான்.

அனந்தாவின் கூட்டம் தலைவரோடும், அவர் கூட்டத்தி லுள்ள ஏனையோரோடும் தொடர்பு கொள்ள முடியவில்லை. ஜலாலாபாத் போர் காதுக்கெட்டியதும், அவர்கள் நகரத்தை விட்டுச் சென்றார்கள். பெனி ஸ்டேஷனில், சந்தேகப்பட்டு அவர் களில் நால்வரைப் போலீசார் காவலில் வைத்தார்கள். ஆனால் காவலாளர்களில் ஒருவனைச் சுட்டு வீழ்த்தி, போலீஸ் பந்தோ பஸ்தினின்றும் அவர்கள் தப்பினார்கள். பெனி சம்பவம் என்று இதற்குப் பெயர் வழங்குகிறது.

கூட்டத்தில் எஞ்சியிருந்தோரையெல்லாம் தலைவர் நாட்டுப் புறத்துக்கு அழைத்துச் சென்றார். ஒருகணம்கூடத் தாமதிக்கா மல் தங்கள் குறிக்கோளைப் பூர்த்தி செய்வதில் அவர்கள் ஆவல் காட்டினார்கள். தொடர்ந்து பல தாக்குதல்களைச் செய்வதன் மூலம் அரசாங்கத்தை ஓய்வு ஒழிச்சலின்றி துன்புறுத்திக்கொண் டிருக்கவேண்டும். இதுதான் அவர்கள் குறிக்கோள்.

மே 6-ந்தேதி தேவிப்பிரசாத், மனோரஞ்சன் ஸென், ரஜத் ஸென், ஸ்வதேஷ் ராய், பாணீந்திர நந்தி, சுபோத சௌத்திரி ஆகியவர்களடங்கிய ஒரு கூட்டம் நதிக்கரை வழியாக ஐரோப்பி யர் வசிக்கும் வீடுகளைத் தாக்குவது என்ற எண்ணத்தோடு வெளிக் கிளம்பியது. ஆனால் இந்தத் திட்டத்தை அனுஷ்டானத் தில் கொண்டுவர முடியவில்லை. திரும்பி வரும்போது கலர் போல் என்ற இடத்திற்கு சமீபத்தில் ஆயுதபாணிகளாக நின்ற போலீஸாரின் கூட்டத்தின்மீது அவர்கள் மோதிக்கொண்டனர்; இந்தக் கைகலப்பில் அவர்களில் நால்வர் கொலையுண்டனர். சுபோதும் பாணியும் காயமுற்றுக் கைது செய்யப்பட்டனர். போலீஸாருக்கு உதவி செய்ய வந்திருந்த குண்டர்களிலும் பலர் கொல்லப்பட்டனர்; பலர் காயமடைந்தனர்.

சில நாட்கள் சென்றன. இளைஞர்களில் சிலர் கைது செய்யப்பட்டனர்: பெரும்பாலோர் தங்கள் வீடுகளிலிருந்தபடியே பிடிக்கப்பட்டனர். சிட்டகாங் ராணுவ அமுலின் கீழ் வந்தது; இரவில் யாரும் வெளிக்கிளம்பக்கூடாதென்ற ஊரடங்கு சட்டம் எங்கும் பிறப்பிக்கப்பட்டது. கைது செய்யப்பட்டவர்களிடையே கலர்ப்போவில் கொல்லப்பட்ட தேவி, ரஜத், அனந்த சிங் ஆகியோரின் தந்தையர்களும் இருந்தனர். அவர்கள் குமாரர்கள் மீதும் மற்றவர்கள் மீதும் பழிக்குப்பழி வாங்குவோம் என்று போலீஸார் அவர்களைப் பயமுறுத்தினார்கள். புரட்சிக்காரர்களுக்கு விரோதமாகவும் அரசாங்கத்திற்குச் சாதகமாகவும் சாட்சி சொல்லும் ஆசாமிகளைத் தயார் செய்வதற்கு அவர்கள் பெருமுயற்சி எடுத்துக்கொண்டார்கள். இந்தச் சமயத்தில்தான் அனந்தசிங் சரணாகதியடைந்து, கைதிகளின் கட்டுப்பாடு உணர்ச்சியை உடைக்க அரசாங்கத்தார் செய்த முயற்சிகளையெல்லாம் வீணாக்கினர்.

1930ல் அனந்த சிங்கும் இன்னும் இதர தலைவர்களும் உள்பட, 30 கைதிகள்மீது அரசாங்கத்தார் வழக்குத் தொடர்ந்தார்கள். இவர்களைத் தண்டிக்க ஒரு விசேஷ விசாரணைக் கோர்ட்டு ஏற்படுத்தப்பட்டது. "சக்ரவர்த்தியின் மீது போர் தொடுத்தது" தான் இவர்கள் மீது சுமத்தப்பட்ட முக்கியமான குற்றம். ஆயுதச்சாலையைச் சூறையாடியதிலிருந்தே அவர்களுடைய புரட்சி நடவடிக்கைகளெல்லாம் ஆரம்பமானபடியால், இந்த வழக்கிற்கு சிட்டகாங் ஆயுதச்சாலைச் சூறை விசாரணை என்று பெயர் வரலாயிற்று.

1930 செப்டம்பர் 1ந் தேதி, ஹூக்லி ஜில்லாவில் சந்திரநாகூரிலுள்ள ஒரு வீட்டைப் போலீஸார் நள்ளிரவில் சூழ்ந்துகொண்டார்கள். அங்கே கணேஷ் கோஷ், அனந்த குப்தா, லோகநாத் பால் ஆகியோர் பிடிபட்டு சிட்டகாங்குக்குக் கொண்டுவரப்பட்டனர். சந்திரநாகூர் கைகலப்பில் போலீஸாரின் குண்டுகளால் ஜீவன் கோஷால் கொல்லப்பட்டார். இவர்களைக் கைதி செய்ததன் காரணமாக, ஆயுதசாலைச் சூறை விசாரணை திரும்பவும் புதிதாக ஆரம்பிக்கப்பட்டது.

இரண்டு மாதத்திற்குப் பிறகு, அம்பிகா சக்ரவர்த்தி நோயால் பீடிக்கப்பட்டிருந்த நிலையிலேயே கைதியானார். அவர்மீதுள்ள வழக்கு ஒத்திவைக்கப்பட்டது. சூரி ஜெயலில் அவரைக் காவலில் வைத்தார்கள்.

ஒவ்வொரு நாளும் புதிய புதிய ஆசாமிகள் கைதிசெய்யப்பட்டனர். புரட்சிக்காரர்களைப்பற்றி விஷயங்களைத் தெரிந்துகொள்ளுவதற்கு போலீஸார் ஜனங்களைப் படாதபாடு படுத்தினர்; இவர்கள்

செய்கிற கொடுமையை இனிப் பொறுத்துக்கொள்ளமுடியாது என்ற நிலை ஏற்பட்டது. செயலற்ற நிலையில் இருப்பதிலும், போலீஸாரின் கையில் சிறைப்படுவதிலும் பிரயோஜனமில்லை என்பதைப் புரட்சிக்காரர்கள் உணர்ந்தார்கள். தலைவர் (சூர்யா சென்) சிறையிலுள்ளவர்களுடன் தொடர்பு ஏற்படுத்திக்கொண்டு புதிய திட்டங்களைப் போட ஆரம்பித்தார்.

நவம்பர் 30ம் தேதியன்று ராமகிருஷ்ண விஸ்வாஸும், காளிபாத சக்கரவர்த்தியும் சாந்த்பூர் ஸ்டேஷனில் போலீஸ் இன்ஸ்பெக்டர் ஜெனரல் கிரெஸ்க் என்று எண்ணிக்கொண்டு இன்ஸ்பெக்டர் தரிணி முக்கர்ஜியைச் சுட்டு வீழ்த்தினர். அவர்களுக்குக் கல்கத்தாவில் விசாரணை நடந்தது. ராமகிருஷ்ண பீஸ்வாஸ் தூக்கிவிடப்பட்டார். காளிபாதா ஜீவியத் தண்டனை பெற்றார்.

1931 ஜூனில் சிட்டகாங்கில் வெடி மருந்துச் சதி கண்டுபிடிக்கப்பட்டது. ஆயுதங்கள், எலக்டிரிக் கம்பிகள், வெடிமருந்து, வாள் முதலியன சிறைக்குள்ளும் வெளியிலும் தோண்டி எடுக்கப்பட்டன. கோர்ட் நடக்கிற இடத்திலும், நகரத்தின் முக்கியமான இடங்களிலும் பூமிக்குக் கீழ் வெடிமருந்து புதைத்து வைக்கப்பட்டிருந்தது.

பொதுஜனங்கள் மட்டுமின்றி, அதிகாரவர்க்கத்தினரும் வெடிமருந்தை வைத்துச் செய்திருக்கும் இந்தச் சதியைப்பார்த்துத் திடுக்கிட்டுவிட்டனர். ஆயுதச் சாலைச் சூறை வழக்கில் ஐந்து பேருக்கு அளித்த ஜாமீனை உடனே அவர்கள் ரத்து செய்தார்கள்; இவர்களில் இருவர் வெடி மருந்துச் சதி என்று வழங்குகிற இந்த வழக்கு சம்பந்தமாக மேல் கோர்ட்டுக்கு அனுப்பப்படுவதற்கென்று விசாரணையிலிருந்து விடுதலை செய்யப்பட்டனர். இது சம்பந்தமாக இன்னும் சில பேர் கைது செய்யப்பட்டனர்; எல்லோரையும் சேர்த்து வெடிமருந்துச் சதிவழக்கில் எட்டுப் பேர் கொண்டுவரப்பட்டனர். இந்த விசாரணையும் ஒரு விசேஷ விசாரணைக் கோர்ட்டின் முன்னரே நடைபெற்றது. அதிகாரிகள் அனந்த சிங்குடனும் அவருடைய ஆட்களோடும் ஒரு ஒப்பந்தத்திற்கு வர முயன்றனர். இந்த ஒப்பந்தத்தின்படி கைதிகள் எல்லோரும் தங்கள் குற்றத்தை ஒப்புக்கொள்ளுவார்கள்; பதிலாக, அவர்களுக்குக் கடுமையான தண்டனை விதிக்கப்படமாட்டாது. இவர்களுக்கு ஜீவிய தண்டனைதான் கிடைக்குமே என்று பொது மக்களுக்கு வருத்தமாயிருந்தது. தீர்ப்புக் கூறியபோது, மூவருக்கு மும்மூன்று வருஷமும், எஞ்சியவர்களில் சிலருக்கு ஆறு மாதமும், சிலருக்கு எட்டு மாதமும் தண்டனை விதிக்கப்பட்டது.

அனந்த சிங், கணேஷ் கோஷ் ஆகியவர்களோடு ஒரு ஒப்பந்தத்திற்கு வரும்படியான நிர்ப்பந்தம் அரசாங்கத்துக்கு ஏற்பட்டது என்பதைக் கண்டு, இவர்களுக்கு எவ்வளவு செல்வாக்கு இருக்கிறது என்பது ஜனங்களின் மனதில் அப்படியே பதிந்துவிட்டது.

ஆயுதச்சாலைச் சூறை வழக்கிலிருந்து, போலீஸ் இன்ஸ்பெக்டர் **அசனுல்லா** நியாயா நியாயமின்றி செய்த அடக்குமுறை அட்டூழியத்தைக் கண்டு பொதுஜனங்கள் அவனைப் பெரிதும் வெறுக்க ஆரம்பித்தார்கள். அவனுடைய சொந்த நடத்தையும் கறைபட்டதாகச் சொல்லப்பட்டது. "**சுதேசிகள்** (அதாவது புரட்சிக்காரர்கள்) ஜனங்களுக்கு எவ்வளவோ செய்திருக்கிறார்கள், இந்தத் துஷ்டனுக்கு அவர்கள் ஒரு நல்ல பாடம் கற்பிக்கக் கூடாதா?" என்று ஜனங்கள் கேட்க ஆரம்பித்தார்கள்.

**1931,** ஆகஸ்டில், கால் பந்து விளையாடும் மைதானத்தில் 14 வயதுள்ள ஹரிபாத பட்டாச்சாரி குண்டுகளினால் அசனுல்லாவின் உடலைத் துளைத்து, அவனை அந்த இடத்திலேயே கொன்ருன். ஹரிபாதாவும் அங்கேயே பிடிபட்டான். ஹரிபாதாவின் குற்றத்தை நிரூபித்துவிடலாம் என்று பூரணமாக நம்பிய அரசாங்கத்தார் ஜூரிகள்மூலம் விசாரணை நடத்த அனுமதித்தனர். ராய் பகதூர் **உபேன் ராய் சௌத்ரி** போன்ற பிரபலமான மனிதர்தான் நேரில் பார்த்ததாக சாட்சி சொல்லியும், சாட்சியம் ஹரிபாதாவுக்கு விரோதமாகப் போகவில்லை ; ஆதலால் 'குற்றமற்றவன்' என்று ஜூரிகள் தீர்ப்புக் கூறினர். என்ருலும் அரசாங்கத்தார் இந்த வழக்கை ஹைக்கோர்ட்டுக்கு கொண்டு சென்ருர்கள். அங்கே இந்தத் தீர்ப்புக்கு நேர் எதிரான தீர்ப்பு கிடைத்தது. அதன் விளைவாக ஹரிபாதாவுக்கு ஜீவிய தண்டனை விதிக்கப்பட்டது.

**1932,** மார்ச் 1-ந்தேதி ஆயுதச்சாலை சூறை வழக்கில் தீர்ப்புக் கூறப்பட்டது. பதினறு பேர் எவ்வித நிபந்தனையுமின்றி விடுதலை செய்யப்பட்டனர். ஆனுல் வங்காள அவசரச் சட்டத்தின்கீழ் அவர்கள் திரும்பவும் கைது செய்யப்பட்டனர். அனந்தாவும் இன்னும் பன்னிருவரும் ஜீவிய தண்டனை விதிக்கப்பட்டார்கள். அனந்தசிங்கின் சகோதரர் நந்துலால் சிங் மூன்று வருஷமும், அனில்பந்து தாஸ் ஐந்து வருஷமும் தண்டனை விதிக்கப்பட்டனர். கடைசியாக குற்றப்பத்திரம் தயாரித்த காலத்தில் அனந்த சிங், ரஜத், தேவி இவர்களின் தந்தையர்கள் விடுதலை செய்யப்பட்டனர்.

**1930-**க்கு முன், பெண்களும் கட்சியில் சேர்த்துக்கொள்ளப்படிருந்தனர். ஆயுதச்சாலை வழக்கிலிருந்து, ஆண்களோடு சேர்ந்து

பெண்களும் புரட்சி வேலையில் நேரடியாகப் பங்கு கொள்ளத் தொடங்கினார்கள். இதன்மூலம், புரட்சி இயக்கத்தில் ஒரு புதிய ஆவேச உணர்ச்சியூட்டும் அம்சத்தை ஜனங்களுக்குக் காட்ட முடியும் என்று தலைவர் எண்ணினார்.

1932-ல், தால்காட் கிராமத்தில் ஒரு வீட்டில் தங்கியிருந்த போது போலீசாரும் புரட்சிக்காரர்களும் திரும்பவும் கைகலந்தார்கள். இங்கே நிர்மல் சிங்கையும், அபூர்வ ஸென்னையும் நாங்கள் இழந்தோம்; அரசாங்கத்தின் தரப்பில் காப்டன் காமரான் கொலையுண்டான். தலைவரும் பிரீதிலதாதாரும் அங்கே இருந்தனர்; என்றாலும் எப்படியோ தப்பித்துக்கொண்டார்கள். அவர்களுக்கு இருக்க இடமளித்த பெண்மணிக்கும், அவரது மகன், இன்னும் வேறிருவருக்கும் புரட்சிக்காரர்களுக்குச் சரணளித்த குற்றத்திற்காக நான்கு வருஷம் தண்டனை கிடைத்தது.

தால்காட் சம்பவத்திற்குப் பிறகு, பிரீதி தலைமறைவாக இருக்க நேரிட்டது. தால்காத்துக்குப் பிரீதி சென்றது தலைவரைச் சந்திப்பதற்கே.

1932, செப்டம்பர் 24-ந்தேதி இன்னொரு தாக்குதல் நிகழ்ந்தது. இப்போது தாக்கப்பட்டது பஹார்த்தலி ரயில்வே கிளப். பிரீதியே இதை முன்னின்று நடத்தினாள். உத்தியோக அறிக்கையின்படி பன்னிரண்டு பேருக்கு நல்ல காயம், ஸ்ரீமதி சல்லிவன் என்ற ஒரு ஆங்கில மாது இறந்தாள். பொடாஸியம் சயனேட் என்ற விஷத்தை அருந்தி வருகிற வழியில் பிரீதி தானகவே தற்கொலை செய்து கொண்டாள்.

அவளுடைய சட்டைப் பையிலிருந்து அவள் தயாரித்த ஒரு அறிக்கையும், அதே தினத்தில் வெளியிட்ட ஒரு துண்டுப் பிரசுரமும் எடுக்கப்பட்டன. ஆயுதச்சாலையைச் சூறையாடிய தினத்திலிருந்து நிகழ்ந்துவருபனவும் நிகழப்போவனவும் யாவும், 1930 ஏப்ரல் 8உ புரட்சிக்காரர்கள் பிரிட்டிஷ் அரசாங்கத்திற்கு விரோதமாகப் பறைசாற்றிய போரில் நிகழும் பல சம்பவங்களேயன்றி வேறல்ல; இந்தியர்கள் அடிமைப்படுத்தப்பட்டிருக்கிற வரையில் இந்தப் போர் நிற்காது என்று அந்த அறிக்கையிலும் துண்டுப் பிரசுரத்திலும் எழுதப்பட்டிருந்தது. பஹார்த்தலித் தாக்குதல் சம்பந்தமாக 84 பேர் கைதி செய்யப்பட்டனர். ஆனல் சாட்சி இல்லாத குறையால் அவர்கள் எல்லோரையுமே விடுதலை செய்யும்படி ஆயிற்று.

இப்போது அம்பிகா சக்கரவர்த்தியோடு இன்னும் இருவரைச் சேர்த்து, ஆயுதச் சூறை அநுபந்த வழக்கு ஒன்று தொடரப்

பட்டது. இரண்டு மாதங்களுக்குப் பிறகு, அம்பிகாவுக்கு மரண தண்டனை விதித்தார்கள். ஒருவருக்கு ஜீவிய தண்டனை கிடைத்தது. இன்னொருவர் காவற்கைதியாகச் சிறையிலடைக்கப் பெற்றார். பிறகு, அம்பிகாவுக்கு அளித்த மரண தண்டனையை ஜீவிய தண்டனையாக ஹைகோர்ட் மாற்றியது.

இதற்குள் நானும் தலைமறைவாகச் சென்று தலைவருடனும் எஞ்சிய கட்சி அங்கத்தினர்களோடும் சுற்றிக் கொண்டிருந்தேன். போலீஸ் கண்காணிப்பு ரொம்பக் கடுமையாக இருந்தது; ஒவ்வொரு கிராமத்திலும் துருப்புக்கள் வைக்கப்பட்டன. எந்த நிமிஷத்திலும் அவர்கள் வருவார்களென்ற பயம் இருந்தது. 1933 பிப்ரவரியில், கைராலா என்ற கிராமத்தில் நாங்கள் மற்றொரு முறையும் போலீஸோடு கை கலந்தோம். குறிப்பிட்ட ஒரு காரியமாகச் செல்லும்போது போலீஸ் வலையில் நாங்கள் சிக்கிக்கொண்டோம். இரண்டு மணி நேரம் கடுமையாகப் போர்புரிந்த பிறகு, தலைவரும் அந்த இடத்திலுள்ள பிரோஜஸ் ஸென் என்ற இளைஞனும் பிடிபட்டனர். பிரோஜஸ் ஸென்னுக்கு நான்கு வருஷம் தண்டனை விதிக்கப்பட்டது. எஞ்சியிருந்த நாங்களெல்லோரும் எப்படியோ தப்பித்துக்கொண்டோம் என்றாலும் தப்பித்துச் செல்லும்போது சாந்தி சக்கரவர்த்தியும், இன்னொரு தோழரும் கடுமையான காயமடைந்தார்கள்.

மே 9-ந்தேதி கஹீரா என்ற கிராமத்தில் ஒரு வீட்டில் தங்கியிருந்த சமயத்தில் அதிகாலையில் போலீஸார் எங்களைச் சூழ்ந்து கொண்டார்களென்பதைக் கண்டோம். கொஞ்சநேரம் குண்டுகளை இரு பக்கத்திலும் பொழிந்தன.

எங்களுக்குத் தங்க இடம்தந்த இந்த வீட்டுச் சொந்தக்கார பூர்ண தாலுக்தார் என்பவர் போலீஸாரின் குண்டினால் அந்த நிமிஷத்திலேயே கொல்லப்பட்டார். என் கண்ணெதிரே, அவருடைய தம்பி நிஸா தாலுக்தார், போலீஸார் சுட்ட குண்டு இதயத்தை துளைத்துச் செல்ல, காயப்படுத்தப்பட்டார். இவர்களோடு மனோரஞ்சன் சென் என்ற 16 வயதுள்ள ஒரு இளந்தோழரும் கொலையுண்டார். தாரகேஷ்வர் தாஸ்திதாரும் நானும் அங்கேயே சிறைப்படுத்தப்பட்டோம். இங்கேயும் இந்த வீட்டுக்காரப் பெண்மணிக்கு நான்கு வருஷம் தண்டனை விதிக்கப்பட்டது.

1933, ஜூனில் தலைவர் சூர்யா சென் தாஸ்திதார் ஆகியோரோடு என்னையும் சேர்த்து ஆயுதச்சாலைச் சூறை இரண்டாவது அநுபந்த வழக்கு ஆரம்பமாயிற்று. அவர்களுக்கு மரண தண்டனையும் எனக்கு ஜீவிய தண்டனையும் கொடுக்கப்பட்டது.

இதன்பிறகு, ஒருவர்பின் ஒருவராக கைதி செய்யப்பட்டார்கள். ஸ்தாபனத்தை எப்படியோ இதுவரையிலும் நடத்திவந்த சாந்தி சக்கரவர்த்தி, மணிதத், காலிகிங்கர் தேவ் எல்லோரும் இதற்குள் கைது செய்யப்பட்டுவிட்டனர்.

இதைக் கண்டு இளைஞர்களாயுள்ள அங்கத்தினர்கள் அநேகமாக நம்பிக்கையை இழந்துவிட்டார்கள் என்று சொல்லவேண்டும். தலைவரைக் கைது செய்ததற்கு அவர்கள் வஞ்சம் தீர்த்துக்கொண்டார்கள். ஜனவரி 2ம் தேதி, கைராலாவில் நேத்ரா ஸென் என்பவரை அவர்கள் கொன்றூர்கள்; காரணம், இவர் தலைவர் தங்கியிருந்த இடத்தைப் போலீஸ்காரர்களுக்குத் தெரிவித்துவிட்டார் என்ற ஆத்திரம்தான். அதே தினத்தில் ஹிமான்சு சக்கரவர்த்தி, நித்யா சென், ஹிரேன் சக்கரவர்த்தி, கிருஷ்ண சௌதிரி ஆகியோர் கிரிக்கட் விளையாடும் மைதானத்தில் வெடிகுண்டுகளை வீசி துப்பாக்கிப் பிரயோகமும் செய்தார்கள். இவர்களில் 16, 17 வயதுக்கு மேற்பட்டவர்கள் யாருமே இல்லை. ஹிமான்ஸுவும், நித்யாவும் அந்த இடத்திலேயே இறந்தனர்; ஹரேனும் கிருஷ்ணவும் பிடிபட்டனர். விசாரணைக்குப் பிறகு அவர்களுக்கும் மரண தண்டனை விதிக்கப்பட்டது.

பத்து நாட்களுக்கப்புறம், ஜனவரி 12ந் தேதி நள்ளிரவில், நகரம், ஜெயில் அனைத்தையும் ராணுவ பந்தோபஸ்தில் வைத்த பிறகு, அரசாங்கத்தார் தலைவர் சூர்யாஸென் மீதும், தாரகேஸ்வர் தாஸ்திதார் மீதும் விதித்த மரண தண்டனையை நிறைவேற்றினர்கள்.

*　　*　　*　　*

என்ன செய்வதென்று தெரியாமல் நம்பிக்கை இழந்து நிற்கும் நிலை, தோல்வி யென்பதையே அறியாத இவர்களது இதயத்தை என்றும் பீடித்ததில்லை. அரசாங்க அடக்குமுறை இவர்களை நசுக்கிவிட முயன்றது வாஸ்தவம்தான். ஆனால் ஜனங்கள் மீது வைத்திருந்த மரியாதையையும் அன்பையும் ஒரு கணமேனும் இவர்கள் இழந்திருந்தார்கள் என்று சொல்லமுடியாது. உணர்ச்சியற்ற நிசப்தமயமான சிறைச்சாலை அறையில் புதிய கொள்கைகளைப் படித்து ஆராயவும், அவற்றை அங்கிகரிக்கவும் போதிய அவகாசமும் சந்தர்ப்பமும் அவர்களுக்கு கிடைத்தன.

எனவே, கடைசியாக கம்யூனிஸ்டு தத்துவத்திற்கு அவர்கள் வந்து சேர்ந்தார்கள். தோழமை யுணர்ச்சி, கட்டுப்பாடு, தன்னலமற்ற தன்மை யாவும் தங்களுடைய இயக்கத்தில் இருப்பது போலவே, கம்யூனிஸத்திலும் மிளிர்வதைக் கண்டார்கள். தனி

நபர்களாக நின்று புரியும் வீரச் செயல்கள், அளவிலா தியாகம், லட்சியத்திற்கு செலுத்தும் பக்தி இவைமூலம் தேச விடுதலையைப் பெறலாம் என்று இந்த ஆண், பெண் வீரர்கள் கண்டு வந்த கனவுகள் மறைந்தன. அது குறுகிய திருஷ்டியுடையது எனவறிந்து அதை விட்டொழித்தனர். கம்யூனிஸ்டு தத்துவம் காட்டியழைத்த பாதையிலே காலடி வைத்தனர். தனிநபர்களின் வீரமும், பெருந்தன்மையும் போதாது; ஒரு சில வாலிபர்களின் நெஞ்சிலே வீர உணர்ச்சியையும், தேசபக்தியையும் சுடர்விட்டு பிரகாசிக்கும்படி செய்ய பாடுபடுவது மட்டும் லட்சிய சித்திக்கு லாயக்கில்லை. ஜனங்களைப் பார்! அந்த கோடானு கோடி ஜனங்களைத் தட்டியெழுப்பி விடுதலைப் பாதையிலே திருப்பிவிடு! தங்களுடைய பலத்தையும், பரம்பரையின் மேன்மையையும் மக்களுக்கு உணர்த்தி வீறுகொண்டு எழச்செய்! கம்யூனிஸ்டு தத்துவம் காட்டிய தெளிவான பாதை இது. விசாலமான பாதை இது. ஜனசமூகத்தையே வீரர்களாக்கவல்ல போர்ப்பாதை இது என்பது அவர்களுக்கு புலப்பட்டது.

அவர்களைப் பரிபூர்ணமாக ஆட்கொண்டுவிட்ட அதே சுதந்திர வேட்கை இந்தப் பாதைக்கு திரும்பும்படி அழைக்கிறது, அதே காலத்தில், வீரபுருஷர்களாக தனித்துநின்று போராடித் திகழும் கூட்டமாக விருப்பதற்கு பதிலாக, ஜனங்கள் மத்தியில் வந்து ஜனங்களைத் திரட்டும்பணியில் இறங்கும்படி கேட்கிறது. பழைய பாதையின் தொடர்ச்சியாகவே அவர்கள் இந்தப் புதிய பாதைக்கு திரும்விட்டனர், திரும்பும்போது, பழைய புரட்சி இயக்கத்துடன் தொடர்பை அறுத்துக்கொள்ளவும் வேண்டியதாயிற்று; சுதந்திரத்திற்காக அன்றே அர்ப்பணித்துவிட்ட அவர்களது வாழ்க்கையும், அவர்களை வசீகரித்துவிட்ட விடுதலை வேட்கையும் சேர்ந்து இன்று கம்யூனிஸத்துக்கு திருப்பிவிட்டது.

வங்கத்தாய் ஈன்ற 'பயங்கரவாத' புரட்சிக்காரர்களில் வெற்றிகரமாகச் செயல் நிகழ்த்திச் சிறந்து விளங்கியவர்கள் சிட்டகாங் கூட்டம்தான் என்பது சந்தேகத்திற்கிடமின்றி அனைவராலும் ஒப்புக்கொள்ளப்பட்டது. இவர்களில் பலர் இன்னும் சிறையிலேயே வாடுகிறார்கள்; கைதிகளாயிருக்கும் இவர்களுக்கும் சரி, விடுதலையுற்று, வெளிவந்து ஜனங்கள் மீது நம்பிக்கைவைத்து சேவைபுரியும் இதர புரட்சி வாதிகளுக்கும் சரி, முன்னால் தெரியும் வழி ஒன்றே ஒன்றுதான்; வேறு மார்க்கம் கிடையாது. உலகெங்கும் உதிக்கும் புரட்சிக்காரர்களுக்கு கம்யூனிஸம் காட்டி வரும் அதேதான் இவர்களும் பின்பற்றக்கூடிய ஒரே வழி.

# நான் எப்படி கம்யூனிஸ்டு ஆனேன்?

............

அன்று, 1932 செப்டம்பர் 17உ இரவு. தலைமறைவாக இருந்த தலைவர்களைச் சந்திப்பதற்காக ஆண் உடையில் சென்று கொண்டிருந்தேன். அப்போது சிட்டகாங் பஹர்த்தலி கிளப்புக்குச் சமீபத்தில் என்னைப் பிடித்து விட்டார்கள். அந்தச் சமயத்தில் நான் தலைமறைவாகவிருந்த கூட்டத்தைச் சேர்ந்தவளல்ல; ஆனால் அங்கேயுள்ள கவர்ன்மெண்ட் கல்லூரியில் நாலாவது வருஷ ஸயன்ஸ் வகுப்பில் படித்துக்கொண்டிருந்த ஒரு மாணவி அவ்வளவுதான்.

இந்தச் சம்பவம் முழுதுமே ஏதோ விபரீதமாகவும் ரகசிய மயமாகவும் தோன்றலாம். இரவில் 'கிளப்பு'க்குப் பக்கத்தில் ஆண் உடையில் என்னைக் காண்பதென்றால், அதை யாராவது எதிர்பார்க்க முடியுமா? இதன் மர்மம் போலீஸ்காரர்களுக்கும் ஒன்றும் புரியவில்லை.

சில காலமாக, சி. ஐ. டி. போலீஸ் என்மேல் சந்தேகப்பட்டு வந்தார்கள். புரட்சிக்காரர்களோடு ஒருவேளை தொடர்பு வைத்திருந்தேனோ என்பது அவர்கள் சந்தேகம். ஆனால் இதற்குச் சாட்சியம் எதுவுமே கிடைக்காத காரணத்தால் அவர்களுக்கு என்ன செய்வதென்று தெரியவில்லை. எனக்குக் காவல்வைத்த போலீஸ் காவலாளர்களும் காவல்காத்துக் காத்துக் களைத்துப் போனார்கள்; ஒருவர் பின் ஒருவராகப்போய் ஒரே விஷயத்தையே திருப்பித் திருப்பி அறிவிப்பார்கள். "கல்லூரிக்குப் போவது, திரும்பிவருவது என்பதைத் தவிர அவள் வீட்டைவிட்டு வெளியே கிளம்பி நாங்கள் பார்த்ததே இல்லை" என்பதுதான் அவர்கள் அறிவிக்கிற விஷயமாக இருக்கும். கல்லூரித் தலைமை ஆசிரியரிடமும் ஆசிரியர்களிடமும் ஏதாவது சொன்னாலோ, அவர்கள் ஆனால் அவள் ரொம்ப ஒழுங்கும் அமைதியுமுள்ள பெண்ணாயிற்றே, அவள் வகுப்புக்கு வருவதிலும் தவறுவது கிடையாதே" என்பார்

கள். என்னைப்பற்றி சந்தேகமறத் தெரிந்துகொள்ளும் நோக்கத்தோடு பாபூரணமாகப் புலன் விசாரிக்க வேண்டுமென்ற ஆவல் அதிகாரிகளுக்கு இருந்தபடியால், என்னைப் பந்தோபஸ்தில் வைத்திருப்பதென்று முடிவு செய்தார்கள்.

இதற்கு ஒரு வாரத்திற்குப் பிறகு, செப்டம்பர் மாதம் 24உ அன்று, பிரீதியின் தலைமையில் புரட்சிக்காரர்கள் 'பஹர்த்தலி கிளப்'பைச் சூறையாடினர்; அங்கேதான் அவள் மரணமடைந்ததும்.

நானும் ஒரு புரட்சிக்காரி, பிரீதியின் கையாள் என்று போலீஸார் என்னவோ திருப்தியடைந்து விட்டார்கள். ஆனாலும் சாட்சியமும் சாட்சிகளும் இல்லாத காரணத்தால் பஹர்த்தலிச் சூறை கேஸை அவர்களால் நடத்த முடியவில்லை. ஆதலால் 109-வது சட்டப் பிரிவின்கீழ் என்மீது குற்றம்சாட்டி, என்னை விசாரணைக்கு அனுப்பினார்கள்; ஜாமீனில் விடுதலையும் செய்தார்கள். விபசாரித்தனம் செய்வதற்காக தங்களை இன்னாரென்று காட்டிக் கொள்ளாமல் வேஷம் மாற்றித்திரியும் ஆசாமிகள் விஷயத்திலேதான் இந்தச் சட்டப் பிரிவை உபயோகப்படுத்துவது!

நான் ஜாமீனில் வெளியான இரண்டு தினங்களுக்குள் தலைவரின் கடிதம் வந்தது. அதில் என்னைத் தலைமறைவாகப் போகும்படி எழுதியிருந்தது. ஆஹா, நான் அப்போது அடைந்த ஆனந்தத்தை என்னவென்று சொல்லுவேன்! ஒருசமயம் பயங்கரவாதிகளின் கட்சியில் பெண்களை எடுத்துக்கொள்வதில்லையென்ற தடை இருந்தது. ஆதலால் அந்தக் கட்சியில் சேர அனுமதிக்கப்பட்ட நாங்கள் பெரிய பாக்கியசாலிகள் என்று எங்களை எண்ணிக்கொண்டோம். இப்போது கேவலம் கட்சியில் சேருவதென்கிற விஷயம் மட்டுமல்ல, தலைவரின் பக்கத்திலிருந்துகொண்டு அவரது நேரடியான தலைமையின்கீழ் அவரோடு சேர்ந்து வேலை செய்வது என்கிற கௌரவமும் கிட்டியது. வாழ்விலேயே இந்த பாக்கியம் கிடைக்குமா என்று எண்ணியது கை கூடிற்று.

டிசம்பர் மாதம் ஜாமீனில் இருக்கும்போதே நான் தப்பித்து வெளியே சென்றேன். எனது விசாரணை இன்னும் நடந்துகொண்டிருந்து போலீஸார் 109-வது சட்டப் பிரிவின்படி என்மீது குற்றம் சாட்டினார்களென்றாலும், ஆயுதச்சாலையைச் சூறையாடிய சம்பவத்திற்குப் பிறகு, அதில் கைப்பற்றிய கருவிகளை நான் ஒளித்து வைத்திருந்தேன் என்றும், கட்சியில் ஏனைய பெண்களையும் சேர்க்க முயன்றேனென்றும், புரட்சிக்காரர்கள் செய்த பல வேலைகளில் நானும் சம்பந்தப்பட்டிருந்தேன் என்றும், இன்னும்

இவைபோன்ற பல குற்றங்களை என்மீது சுமத்தியும் அவற்றை நிரூபிக்க அவர்கள் உண்மையிலேயே ஆவல் கொண்டிருந்தனர்.

இதைப் பார்த்து ஜனங்கள் சிரித்துவிட்டு, "இதென்ன அசட்டுத்தனம்! 109 சட்டப் பிரிவின்கீழ அரசியல் விசாரணையா? ரொம்ப நன்றாயிருக்கிறது!" என்று சொன்னார்கள்.

தலைமறைவாக இருந்தபோது, நான் தலைவருடனேயே இருந்தேன்; ஊர் ஊராக அவரோடு சென்றேன். அதே சமயத்தில் எதிர்காலச் செயல் திட்டத்திற்கு வேண்டிய ஏற்பாடுகளையும் செய்து வந்தோம். தலைவர் புரட்சிகரமான இளைஞர்களின் கதைகளைச் சொல்லி, உறுதியோடு இலட்சியங்களை நோக்கி நடக்க வேண்டுமென்று எங்களைத் தூண்டுவார்; வெடிகுண்டுகளையும் வெடிக்கும் இயல்புள்ள இதர மருந்து வகைகளையும் எப்படித் தயார் செய்வது என்பதைப்பற்றி எங்களுக்கு தாரகேஷ்வர் பயிற்சி அளிப்பார்; தான் சொல்லுவதையெல்லாம் விபரமாக எழுதிக்கொள்ளச் சொல்லுவார். நாங்கள் சென்றபிறகு எங்களுக்குப் பின் வருபவர்களுக்கு அவை உபயோகமாயிருக்கும் என்பது அவர் நம்பிக்கை.

1933, பிப்ரவரியில் தலைவர் பிடிபட்டார். ஆனால் எங்களைச் சுற்றி வளைத்துக்கொண்டிருந்த போலீஸ் பிடியிலிருந்து நாங்கள் எப்படியோ தப்பித்துக் கொண்டோம். இதற்கு மூன்று மாதத்திற்குப் பிறகு மே மாதத்தில் நானும் தாராகேஷ்வரும் ஒன்றாகக் கைது செய்யப்பட்டோம். எங்கள் மூவருக்கும் ஒன்றாகவே விசாரணையும் நடந்தது. அவர்கள் இருவருக்கும் மரண தண்டனையும், எனக்கு ஜீவிய தண்டனையும் விதிக்கப்பட்டது. இந்த விசேஷ விசாரணைக்கென்று நியமித்த நியாயாதிபதி, தனது தீர்ப்பில், நான் பெண்ணாகவும் இளம்பருவத்தினளாகவும் இருப்பதனால் எனக்கும் மரண தண்டனை விதிக்கவில்லையென்று கூறினார்.

சிறைச்சாலைக்கு வந்து சேர்ந்தேன். 1934 பிப்ரவரி 12உயன்று தலைவரும், தாரகேஷ்வரும் தூக்கிலிடப்பட்டனர். ஆனால் பல மாதங்களுக்குப் பிறகே இதர கைதிகளிடமிருந்து இந்தச் செய்தி எனக்கு ரகசியமாக எட்டியது. அவர்களை இழந்தது எனக்குத் தாங்கமுடியாத வருத்தத்தை அளித்தாலும், எனது வாழ்க்கை முழுதும் இந்தச் சிறையிலே கிடந்து சாவது என்ற எண்ணத்தை என்னால் தாங்க முடியவில்லை. இன்னும் இரண்டு அல்லது நான்கு வருடங்களில் நாம் எல்லோரும் சுதந்திர மனிதர்களாகி விடுவோம் என்ற நம்பிக்கை என்னவோ எனக்கு இருந்து வந்தது. நாம் சிறையிலிருக்கிற வரையில், நமது நாட்டுமக்கள்

அமைதியோடு சும்மா இருக்கப் போவதில்லை; நமக்கு அவர்கள் எப்படியும் விடுதலையைக் கொண்டு வருவார்கள் என்றெல்லாம் நான் கணக்குப் போட்டேன். இந்த நம்பிக்கையால், மற்ற கைதிகளுக்கும் நான் உற்சாகம் ஊட்டுவேன்.

இந்தக் காலத்தில் எல்லாம், நாங்கள் முடிக்காமல் விட்டுவந்த அரைகுறையான வேலையைப் பற்றியும், விடுதலை பெற்றதும் முன் காணப்பட்ட பலஹீனங்களையும் குறைகளையும் களைந்து விட்டு எப்படி அந்த வேலையை விரிவுபடுத்துவது என்பதைப் பற்றியுமே நாங்கள் சிந்தித்துக் கொண்டிருந்தோம்.

எனவே, சிறைக்குச் சென்றதும் எங்களுக்கேற்பட்ட முதல் கவலை உடம்பையும் மனதையும் ஒருங்கே ஆரோக்கியமாக வைத்துக் கொள்வதிலேயே இருந்தது. சிறையிலிருக்கும்போது எங்களது சுயமரியாதைக்கும் மதிப்பிற்கும் பங்கம் ஏற்படாதவாயில், அங்குள்ள சட்ட திட்டங்களை மீறுவதோ வேறு எவ்விதமான அமைதியின்மையை உண்டாக்குவதோ கூடாது என்றும் நாங்கள் முடிவு செய்திருந்தோம். மத சம்பந்தமான புத்தகங்களை ரொம்ப ஆவலோடு தவறுமல் நான் படிப்பேன். வீட்டிலிருந்துவந்த புத்தகங்களை யல்லாமல், கடன் வாங்கியும்—அவற்றில் அநேகம் ஜெயில் புத்தகசாலையிலிருந்து வாங்கியவை—படிப்பதுண்டு. ஏனெனில், மனத்தை திடப்படுத்தவும் மனோசக்தியைக் கட்டுப் படுத்தவும் இதுதான் தகுந்த வழியென்று நான் நம்பினேன்.

தண்டனை விதித்ததும், என்னை ஹிஜ்லி ஜெயிலுக்குக் கொண்டு சென்றூர்கள். இங்கே இரண்டாவது பகுதியைச் சேர்ந்த பெண் கைதிகள், காவற்கைதிகள் இவர்களோடு சேர்ந்து படிப்பதற்கு ஏராளமான சந்தர்ப்பம் இருந்தது. ஆனால் மூன்று மாதத்திற்குள் அங்கிருந்து அப்புறப்படுத்தப்பட்டேன். இந்த மூன்று மாத காலத்தில் நான் ஒன்றும் அதிகமாகப் படித்துவிட வில்லை. உடலை இரும்புபோல உறுதியாக்குவதற்கு ஆரோக்கியத்தைப் பாதுகாத்தும், மனதை ஒருவழிப்படுத்த மத சம்பந்தமான புத்தகங்களைப் படித்தும், எதிர்கால வேலைக்கு என்னைத் தயார் செய்து கொள்ளுவதிலேயே எனது கவனம் முழுதும் சென்றது.

மூன்று அல்லது நான்கு வருடங்களுக்குப் பிறகு, பெண் அரசியல் கைதிகள் அனைவரையும் ஒரே இடத்தில் வைப்பது என்று முடிவு செய்யப்பட்டது. காவற் கைதிகளோடு நெடுங்காலம் தங்க நேர்ந்தமையால், அவர்களில் அநேகருக்கு வெளி யுலகத்தில் நடக்கும் சம்பவங்களைப்பற்றித் தெரிந்துகொள்ளச் சந்தர்ப்பம் ஏற்பட்டது; 'பரிச்சயா' போன்ற முற்போக்கான கொள்கையுடைய

பத்திரிகைகளும் சஞ்சிகைகளும் சிறிது சிறிதாக சிறைக்குள் வர ஆரம்பித்தன. சமயத்திற்குச் சமயம் அவர்கள் கம்யூனிஸத்தைப் பற்றிப் பேசுவதை எனக்குக் கேட்கவும் முடிந்தது; அவர்களிட மிருந்தே ஜோட், கோல், பேர்ஞர்ட் ஷா ஆகியோர் சோஷலிஸம், கம்யூனிஸம் என்பதைப் பற்றி எழுதிய புத்தகங்கள் எனக்குக் கிடைத்தன.

இந்தப் புத்தகங்களில் விஷயத்தை நோக்கும் முறையும், இவற்றின் வாதங்களும் மனதில் ஒரு கிளர்ச்சியை யுண்டாக்கின. இவற்றிற்கும் குதிராம், மனைலால், பகத்சிங் போன்ருேரது புரட்சிச் செயல்களுக்கும் உள்ள வித்தியாசங்களைப்பற்றிச் சிந்திக்கும்படியும் வற்புறுத்தின. இவர்களின் வீர வாழ்க்கை நமது மனதில் ஒரு பெருங் கொத்தளிப்பை உண்டுபண்ணி மரணத்தைத் திரணமாக மதிக்கக் கற்றுக்கொடுத்தது. என்பது வாஸ்தவமே; ஆனல் சமதர்மத்தையும், கம்யூனிஸத்தையும் விவரித்து வாதித்த புத்தகங்கள் பொருத்தமற்றவை என்று தள்ளிவிட முடியவில்லை. இதன் விளைவாக, மனதில் ஒரு புதிய போராட்டத்தின் சலசலப்பு ஈனஸ்வரத்தில் கேட்க ஆரம்பித்தது.

இந்தப் புத்தகங்களை நான் ஆவலோடு படிக்கத் தொடங்கினேன்; எனது சொந்தக் கருத்துக்களின் போக்கோடு அவற்றைப் பொருத்தி, எனக்குத் தெரிந்தபடியே அவற்றிற்கு அர்த்தமும் செய்துகொண்டேன். எனவே, கம்யூனிஸம் ரொம்பச் சரியானதே, அதற்கும் எங்களது கருத்துகளுக்கும் வேறுபாடு இல்லையென்று எண்ணத் தோன்றியது. பயங்கரவாதிகளைத் தங்கள் எதிரிகளாகக் கம்யூனிஸ்டுகள் கருதுகிருர்கள் என்று யாராவது சொன்னல், எனக்குச் சிரிப்பு வந்துவிடும். இதை என்னல் நம்பவே முடிவதில்லை. எங்களது இலட்சியங்கள் ஒன்றே. நாங்கள் இரு கூட்டத்தினரும் சுதந்திரத்திற்காகவே எங்களை அர்ப்பணம் செய்திருக்கிருேம் என்பது உண்மையானல், நாங்கள் சகோதரப் பிரயாணிகளே யன்றி, ஒரு நாளும் எதிரிகளாக இருக்க முடியாது என்ருலும், எங்களைவிட கம்யூனிஸ்டுகள் அதிகமாகப் படித்திருக்கிருர்கள், மனிதர்களையும், விஷயங்களையும், உலகத்தையும், ஜனங்களையும் அவர்களது சென்ற காலத்தையும்பற்றி எங்களைவிடக் கம்யூனிஸ்டுகள் அதிகமாகத் தெரிந்திருக்கிருர்கள் என்கிற உண்மையை மட்டும் ஒப்புக்கொள்ளாமல் முடிவதில்லை. ஆதலால் அவர்களைவிட நாங்கள் தாழ்ந்தவர்கள்தான் என்ற எண்ணம் திருட்டுத்தனமாக என் மனதில் எப்படியோ புகுந்து வளர்ந்து வந்தது.

வெளியுலகத்தைப் பற்றிய செய்தி ஒன்றுகூட எங்கள் காதுக்கு எட்டாது. தினசரிப் பத்திரிகைகளை வரவழைப்பதற்கு

எங்களுக்கு அனுமதியில்லை. ஆனல் 'ஸ்டேட்ஸ்மன்' பத்திரிகை யின் வெளி நாட்டு வாரப்பதிப்பும், மிகமிகப் பிற்போக்கான 'ஹிந்து' வகுப்புவாத மனப்பான்மை கொண்ட பத்திரிகை "சஞ் சீவனி"யும் அதிலும் அதன் வார வெளியீடு மட்டுமே, எங்களுக்கு அனுமதிக்கப்பட்டன.

இந்தப் பத்திரிகை ஒரு விசேஷ காரணத்தை யொட்டி எங் களுக்கு விசேஷமான கவர்ச்சியை யளித்தது. கைதிகளைப் பற் றிய செய்திகள் இப்பத்திரிகையில் வெளியாகும். வேறு பத்தி ரிகை கிடைக்காத காரணத்தால் ஒவ்வொரு வாரமும் நாங்கள் ஆவலோடு இந்தத் திரும்பத் திரும்பப் படிப்பது வழக்கம். பெண் கள் நடனக் கலையைக் கற்றுக்கொள்ளுவதைப்பற்றி இந்தப் பத் திரிகையின் பத்திகளில் கோபத்தோடு கண்டித்திருப்பதைப் படிக் கும்போது, எங்களுக்குக் கோபமோ, பரபரப்போ ஏற்படுவதற் குப் பதிலாக சிரிப்புத்தான் வரும். இந்தப் பத்திரிகையின் கதைக் குப் பக்கத்தில் ஜதீன் மஜூம்தார் என்பவரால் தவருமல் எழுதப் பட்டுத் தொடர்ந்து வெளிவரும் சோவியத்—எதிர்ப்புப் பிரசா ரத்தை, அதிலும் விசேஷமாக ஸ்டாலினைப்பற்றி வசைமாறி பொழிந்ததைப் படித்து வந்ததன் விளைவாக அவை என் மனதில் பதிந்துவிட்டன வென்றுதான் சொல்லவேண்டும்; முற்போக்கு இயக்கங்களுக்கு விரோதமான இந்தப் போக்கை என்னை யறியா மலே உண்மை என்று நான் நம்ப ஆரம்பித்துவிட்டேன்.

எனவே, சமதர்மம் நல்லது என்ற எண்ணத்தை வைத்துக் கொண்டே, ஸ்டாலினை எதிர்க்கும் கடுமையான ஒரு மனப் போக்கை நான் பெற்றேன். சிறைச்சாலையிலுள்ள புரட்சிக்கா ரர்களிடையே முற்போக்கு எண்ணங்கள் பரவாமல் தடுக்க அர சாங்கத்தார் செய்த பிரம்மப் பிரயத்தனங்கள் ஓரளவு பலனளித் தது என்பதில் ஐயமில்லை. முற்போக்கிலிருந்து எங்களை முழுதும் திருப்பிவிட முடியாவிட்டாலும், எங்கள் மனதில் குழப்பத்தை உண்டாக்கி, எங்கள் சிந்தனைப் போக்கில் பிளவை உண்டுபண்ணு வதற்கு அது உதவியாக இருந்தது.

இம்மாதிரியான பலத்த போர்கள் என் மனதில் நிகழ்ந்து கொண்டிருந்தபோது "நான் அமைதியாக இருக்கமாட்டேன்" என்ற ரோமெயின் ரோலந்து எழுதிய புத்தகம் என் கைக்குக் கிட்டியது. "ஜீன்கிருஸ்டபர்" "ஆனந்தத்தில் மூழ்கிய ஆத்மா" என்பன போன்ற புத்தகங்களைப் படித்ததின் காரணமாக ரோலந் தின் புத்தகங்கள்மீது எனக்கு ஏற்கேனவே ஒரு பிரியம் விழுந் திருந்தது. "நான் அமைதியாக இருக்கமாட்டேன்" என்ற புத்த கம் ரஷ்யப் புரட்சிக்கு ஆழ்ந்த அபிமானத்தை வளர்த்தது. லெனி

னுடைய மகோன்னதமான பெருமையைப் பற்றியும் வந்தனை செய்ய என்னைத் தூண்டிவிட்டது.

இதைப் படித்த பிறகு, படிக்க வேண்டுமென்ற ஒரு அகாத மான ஆசை என்னைப் பற்றிக்கொண்டது. நான் மேலும் மேலும் படிக்கவேண்டும், நான் வாழ்கிற நாள் வளர்ந்திருக்கிற இந்தச் சமூதாயத்தைப்பற்றி, என்னை இந்த நிலைக்குக் கொண்டுவந்திருக் கிற சமூதாயத்தைப்பற்றி, தெளிவாகத் தெரிந்துகொள்ள வேண்டு மென்கிற ஒரு உத்வேகம் திரும்பத்திரும்ப என்னைத் தாக்க ஆரம்பித்தது.

1937-ல் மாகாண சுயாட்சி ஏற்பட்டவுடன், விசாரணையின்றி வைத்திருக்கும் அரசியல் கைதிகளை உடனே விடுதலை செய்யும் படியும், அந்தமான் கைதிகளை இந்தியாவுக்குக் கொண்டுவந்து விடுதலை செய்யும்படியும் கிளர்ச்சி செய்து ஒரு மகத்தான பொது ஜன இயக்கம் ஆரம்பிக்கப்பட்டது.

அந்தமான் கைதிகள் இந்தியச் சிறைகளுக்கு வந்தார்கள், விசாரணையின்றி வைத்திருந்த கைதிகள் விடுதலை செய்யப்பட்ட னர், ஆயுதசாலை கொள்ளை வழக்கில் சம்பந்தப்பட்ட கைதிகளில் நீண்ட காலத் தண்டனைபெற்ற மூவர் இளம்பருவத்தினர் என்ற காரணத்தைக் கொண்டு விடுதலை செய்யப்பட்டனர்.

என்னையும் விடுதலை செய்வார்களென்று நான் ஆவலோடு எதிர்பார்த்துக் கொண்டிருந்தேன்.

எனது விடுதலைக்காக கவியரசர் ரவீந்திரநாத்தும், தீனபந்து ஆண்ட்ரூசுமே கவர்னரோடு மன்றாடிக் கொண்டிருக்கிறார்கள் என்று எனது தகப்பனார் அனுப்பிய செய்தி எனக்கு உற்சா கத்தை யளித்தது.

சில தினங்கள் சென்ற பிறகு, நாங்களிருந்த மிதுனபுரி ஜெயி லுக்கு எங்களைப் பார்க்க காந்திஜியே வருவார் என்று ஜெயில் அதிகாரிகள் எங்களுக்கு அறிவித்தார்கள். காந்திஜி வரப்போகி றார் என்று எண்ணும்போது எனக்கு உடல் புளகாங்கிதம் அடை யும்; இந்த ஆனந்தத்தில் இரவில் எனக்குத் தூக்கம்கூட வருவ தில்லை. விடுதலை கிடைக்கும் என்ற ஆனந்தம் அல்ல இது, ஆனல் நமது தேசத்தின் ஒப்பற்ற தலைவர் நம்மைப் பார்க்க வருகிறார் என்ற ஆனந்தம். அவரிடம் எதைச் சொல்வது. எதைச் சொல் லாமல் விடுவது என்று இப்படியாக என் மனது பல கேள்வி களைக் கேட்டுக் கொண்டிருந்தது. உடல் நலம் சரியின்மையின் காரணமாக காந்திஜி மிதுனபுரிக்கு வரமுடியவில்லை. அவரைச் சந்திப்பதற்கு எங்களை யெல்லாம் கல்கத்தா மாகாண ஜெயிலுக்கு

கொண்டு சென்றார்கள். காந்திஜியைப் போன்ற பெரிய மனிதர் செய்ய முடியாத காரியம் என்று ஒன்று கிடையாது, அதுகாரண மாகவே ஜனங்கள் அவருக்குமரியாதை செலுத்துகிறார்கள் என்று எனக்கு அப்போது பட்டது.

சிறிது நேரம் சம்பாஷித்த பிறகு, காந்திஜி என்னைப் பார்த்துச் சொன்னார்: "நாஜிமுத்தீன் உங்கள்மீது ரொம்பக் கோபமாயிருக்கிறார், சிட்டகாங் ஆயுதச்சாலையைச் சூறையாடிய கைதிகள் ஒருவரையும் விடுதலை செய்யப் போவதில்லை யென்று சொல்லுகிறார். ஆயினும் நான் உங்களுக்காக முயற்சிசெய்து வருகிறேன்."

ஆனால் இத்தனை மகத்தான பொதுஜனக் கிளர்ச்சியை அரசாங்கத்தார் அலட்சியம் செய்யத் துணிய மாட்டார்களென்று நான் உறுதியாக நம்பினேன். என்னை மட்டும் வைத்துக்கொண்டு மற்ற பெண் கைதிகளை யெல்லாம் ஒருவர்பின் ஒருவராக விடுதலை செய்த காலத்திலும், இந்த நம்பிக்கையை மட்டும் நான் இழக்கவில்லை.

1939-ம் வருஷம் மே மாதம் முதல் தேதி, பொதுஜன வற்புறுத்தலுக்கு அரசாங்கத்தார் இறுதியாகப் பணிந்து கொடுக்கும்படி நேர்ந்தது புது உற்சாகத்தோடு வேலையில் ஈடுபடுவதென்ற ஆசையோடு நான் வெளியே வந்தேன்.

என்னை வரவேற்பதற்குத் தந்தையாரும், அத்தை மகன் (Cousin) ஜுவ்குவும் ஜெயில் வாயிற்படி யருகில் நின்று கொண்டிருந்தார்கள். ஜுவ்குவும் ஆயுதச் சாலைக் கேஸில் தண்டனையடைந்து, எட்டு வருஷம் சிறை வாழ்க்கையை அனுபவித்த பிறகு இளைஞர் என்ற காரணத்தை முன்னிட்டு சென்ற வருஷம் தான் விடுதலை செய்யப்பட்டார்.

எங்கள் வீடுவரையில் வந்துவிட்டு, மறுநாள் வருவதாகச் சொல்லி அவர் போய்விட்டார்.

மறுநாள் முதல், பலர் சந்திப்பதற்காகக் கூட்டம் கூட்டமாக வந்தனர். அவர்களில் பரிச்சயமானவர்கள், பரிச்சய மல்லாதவர்கள் எல்லோரும் இருந்தனர். இளைஞர்களா யுள்ளவர்கள், நான் அவர்களோடுதான் சேர்ந்து பணியாற்ற வேண்டுமென்று கெஞ்சுவார்கள். எனது எதிர்காலத்தைப்பற்றி நான் ஒன்றும் முடிவு செய்யாமலிருந்ததைக் கண்டு பலர் திடுக்கிட்டு விட்டனர். முதியவர்களில் சிலர் என்னருகில் வந்து புத்திமதி கூறினார்கள்: "கம்யூனிஸ்டுகள் உன்னை அணுகுவார்கள். அனந்தா, கணேஷ், இன்னும் ஏனையோரும் கம்யூனிஸ்டாக மாறிவிடவில்லை," என்று தன் சொற்படியேதான் நடக்க வேண்டுமென்று அம்பிகா எனக்கு

எழுதிய 'கடிதத்'தைக் காண்பிக்கும் அளவு ஒருவர் சென்று விட்டார். "அனந்தாவும், இன்னும் பிறரும், கம்யூனிஸ்டுகளோடு சேர்ந்துகொண்ட சிட்டகாங் குழுவிலுள்ள மூவரைக் கட்சியில் இருந்து நீக்கிவிட்டார்கள்," என்று யாரோ ஒருவர் குறிப்பிட்டார்.

அநேகர் பிரசங்கமாரி பொழிந்து, கீழ்வருமாறு என்னை எச்சரிப்பதற்குப் பின்வாங்கவில்லை. "குறிப்பிட்ட மனிதர் ஒருவர் வந்து உன்னைப் பார்த்தார் என்று தெரிகிறது; ஆனால் அவருக்கு எவ்வித வாக்குறுதியும் அளித்து உன்னைக் கட்டுப்படுத்திக் கொள்ளாதே."

இவர்களுக்கு என்ன பதில் சொல்லுவதென்றே எனக்குப் புரியவில்லை. இவர்கள் எல்லோரும் ஒரு காலத்தில் பயங்கர இயக்கத்தைச் சேர்ந்தவர்களே, இவர்களில் யாரை நம்புவது, யார்மீது அவநம்பிக்கைப்படுவது! இருந்தாலும் முடிந்த வரையில் என்னைச் சாந்தப் படுத்திக்கொண்டு, "நான் யாரோடு சேர்ந்து வேலை செய்யப் போகிறேன், நான் என்ன செய்யப் போகிறேன் என்கிற விஷயம் சிறிது நாளில் உங்களுக்குத் தெரியவரும்" என்று நான் சொன்னேன்.

நாட்கள் சென்றன. ஒரு சமயம், கமலா சாட்டர்ஜியுடன் நான் வெளியே சென்றேன். கமலா சாட்டர்ஜி ஒரு காவற்கைதியாக இருந்து இரண்டு வருஷத்திற்குத்தான் விடுதலை பெற்றார். வழியில் படுவேகமாகச் சென்று கொண்டிருந்த ஒரு பையனை கமலா நிறுத்தி, "இங்கே பார், இவர்தான் சிட்டகாங் கல்பனா தத் என்பவர். இப்போதுதான் விடுதலையடைந்திருக்கிறார்" என்று சொன்னார். "அதற்கு நான் என்ன செய்யட்டும்?" என்று துடுக்காகக் கேட்டுவிட்டு, என்னைத் திரும்பிக்கூடப் பார்க்காமல் அந்தப் பையன் போய்விட்டான். "இவன் கம்யூனிஸ்டு கட்சியைச் சேர்ந்தவன், ஒரு அவசர வேலையாகச் செல்கிறபடியால் அவனுக்கு நின்று பேசச் சமயம் இல்லை," என்று கமலா விளக்கிச் சொன்னார்.

கங்காதர் தெருவிலுள்ள தொழிற் கட்சி (லேபர் பார்ட்டி) ஆபீசுக்கு கமலா என்னை அழைத்துச் சென்றார். கம்யூனிஸ்டு இளைஞர்கள் பலர் அங்கு வருவதுண்டு. ஏனெனில் ஒருவரையொருவர் வெளிப்படையாகச் சந்தித்துப் பேசுவதற்கு அதுதான் ஒரே இடமாக இருந்தது.

அவர்களில் பலருக்குக் கமலா என்னை அறிமுகம் செய்து வைத்தார். அங்கிருந்து ஒரு நண்பர், நிகரேந்து தத் மஜூம்தார் வீட்டுக்கு என்னை அழைத்துச் சென்றார். அங்கே தொழிற் கட்சி

அங்கத்தினர் பலரை நான் சந்திக்க முடிந்தது. சிட்டகாங்குக்குத் திரும்பிச் செல்லும்போது படிப்பதற்கு சமுதாய நூல், உயிர் நூல் போன்ற சில புத்தகங்களை அவர்கள் எனக்குத் தந்தார்கள்.

எனக்கு ஒரே குழப்பமாகவும் கவலையாகவும் இருந்தது. இந்த சில வருஷங்களில் வெளியுலகம் கண்டுகொள்ள முடியாத அளவுக்கு மாறிவிட்டதுபோலத் தோன்றியது.

சுஹாசினி காங்குலியிடம் நான் சென்றேன். இவளும் காவற் சிறையிலிருந்து சென்ற வருஷம்தான் வெளிவந்தாள். அனந்தாவையும் ஏனையோரையும் பற்றி ஏதாவது செய்தி கிடைத்ததா என்று அவளைக் கேட்டுவிட்டு, நான் விடுதலை பெற்றதிலிருந்து அவர்களைப்பற்றி நான் கேட்ட விஷயங்களை யெல்லாம் சொன்னேன். "அனந்தா, கணேஷ் இன்னும் சிட்டகாங் குழுவைச் சேர்ந்த ஏனையோரும் கம்யூனிஸ்டுகளாக ஆகிவிட்டார்கள்" என்று அவள் சொன்னாள். ஜுனுவிட மிருந்து எல்லா விவரங்களையும் தெரிந்துகொள்ளும்படி அவள் எனக்கு ஆலோசனை கூறினாள்.

பலதிறப்பட்ட இந்த அபிப்பிராயங்களிலிருந்து தப்புவதற்கும், வெவ்வேறான கூட்டங்களைச் சேர்ந்த இளைஞர்களிடம் சென்று சிக்கிக் கொள்வதைத் தவிர்ப்பதற்கும், மறுநாளே நேரே ஜுனு தங்கி இருந்த இடத்திற்கு நான் சென்றேன். அங்கு இன்னும் மூவர் இருந்தனர். அவர்கள் எல்லோரும் கம்யூனிஸ்டுகள். ஜுனுவும் ஜெயிலில் இருந்தபோது கம்யூனிஸ்டாகி விட்டாள். என்னைச் சந்தித்துப்பேசி, கேள்வி கேட்ட எல்லோரையும்பற்றி நான் அவரிடம் கேட்டேன். அவர் கீழ்வரும் பதிலை மட்டும் சொன்னார். "நீங்கள் எங்கள் கட்சிக்கு வந்துவிட்டால், உங்களுக்கு உண்மையிலேயே சந்தோஷத்தை யளிக்கும். ஆனால் இது இது என்று பொய்யான விஷயங்களைச் சொல்லியோ, நியாயமற்ற வழியைக் கையாண்டோ உங்களை எங்கள் பக்கம் கொண்டுவர நாங்கள் விரும்பவில்லை. உள்ள விஷயங்களைக் கவனித்து, கேட்டு, அறிந்து கொள்ளுவது உங்கள் வேலை. அதன் பிறகு உங்களுக்கு எது உசிதம் என்று தோன்றுகிறதோ அதைச் செய்யுங்கள். நீங்கள் படிக்க விரும்பினால், புத்தகங்களைத் தந்து உதவத் தயாராயிருக்கிறோம். இதற்குமேல் எங்களால் ஒன்றும் செய்வதற்கில்லை; யார் உண்மை பேசுகிறார்கள், யார் பொய் சொல்லுகிறார்கள் என்பதைத் தீர்மானிக்கிற பொறுப்பு உங்களுடையதே; அந்த விஷயத்தில் நான் சொல்வதக்கு ஒன்றும் இல்லை."

அவருடைய பேச்சின் போக்கு ஏதோ புதிதுபோல எனக்குப்பட்டது. நான் வெளிவந்ததிலிருந்து தங்கள் கூட்டத்தில் என்னைச் சேர்த்துக்கொள்வதற்கு பல திறப்பட்ட ஜனங்கள் ஒரே

யடியாகத் தங்கள் கூட்டத்தைப்பற்றிப் புகழுவதையும், அல்லது வெளிப்படையான பொய்களைச் சொல்லுவதையுமே நான் கேட்டு வந்தேன். எனவே, கம்யூனிஸ்டுகளிடம் எனக்கு ஒரு தனி மரியாதை ஏற்பட்டு விட்டது. இந்த உணர்ச்சியுடனேயே நான் சிட்டகாங்குக்குத் திரும்பினேன்.

இது நிகழ்ந்த ஒரு வாரத்தில், நான் சிட்டகாங்கில் இருந்தேன். எனக்கு முன்பு பரிச்சயமாயிருந்தவர்களில் கம்யூனிஸ்டாக மாறியவர்களே இன்னும் செயலில் ஈடுபட்டுச் சேவைபுரிவதை அங்கு நான் கண்டேன். தொழிலாளர் சங்கங்களை வளர்ப்பதற்கு ரயில்வே தொழிலாளர்களிடையே அவர்கள் போய் வேலை செய்வார்கள், கப்பல்கட்டும் தொழிலாளர்களிடையே அவர்கள் போய் வேலை செய்வார்கள்; குடியானவர்களிடையே அவர்கள் செல்வார்கள், மாணவர் சம்மேளனத்தின்மூலம் மாணவர்களை ஸ்தாபனரீதியாகத் திரட்ட முயல்வார்கள். ஏனையோரோ என்றால், பெரும்பாலும் ஒன்றும் செய்யாமல் சும்மா இருந்தார்கள்; அவர்களில் ஒரு சிலர் புதிய கோஷ்டிகளை அமைப்பதற்கு முயன்று கொண்டிருந்தார்கள். என்னால் சும்மா இருக்க முடியாதபடியால் கம்யூனிஸ்டுகளுடன் சேர்ந்து நான் செயலாற்றத் தொடங்கினேன்; கம்யூனிஸத்தை தெளிவாக அறிந்துகொள்வதற்கு எனக்கு உதவி செய்யும்படியும் நான் அவர்களைக் கேட்டுக்கொண்டேன்.

நான் சிறிது வேலை செய்வது, சிறிது படிப்பது என்ற திட்டத்தோடு ஆரம்பித்தேன். சுத்தால் சேரிக்குச் சென்று அங்குள்ள கூலிகளுக்குப் பாடம் சொல்லுவேன். அதேமாதிரி மாலி (நகர் சுத்தித் தொழிலாளர்கள்) சேரிக்கும், வண்ணார் சேரிக்கும் சென்று அங்கே ரகசியக் கூட்டங்கள் போடுவேன். ஸ்தாபன ரீதியாகப் பொதுமக்களைத் திரட்டுகிற வேலையில் பயிற்சிபெற்று, அந்தச் சோதனையிலும் வெற்றிபெற்ற பிறகே கம்யூனிஸ்டு கட்சியில் அங்கத்தினர் பதவியைப் பெறமுடியும் என்று நான் கேள்விப்பற்றிருந்தேன். மக்களைத் திரட்டும் எந்த ஸ்தாபனத்திலும் வேலை பார்ப்பது எனது சக்திக்கு அப்பாற்பட்டதாயிருந்தபடியால் நான் கம்யூனிஸ்டு கட்சியில் அங்கத்தினராகச் சேர முடியாதென்று எண்ணிக்கொண்டிருந்தேன். கம்யூனிஸ்டு கட்சியில் அங்கத்தினராவது கஷ்டமான காரியமில்லையா?

சில சமயங்களில் யாராவது ஒரு கம்யூனிஸ்டின் நடத்தையைக் கண்டு என் மனம் அமைதியை இழந்துவிடும்; கம்யூனிஸத்தின் பேரால் யாராவது ஒரு ஆசாமி வந்து காதல் என்பது விரும்பிய விதியே என்று பிரசங்கம் செய்ய வருவார்; இதற்கு என்ன

அர்த்தமென்றே எனக்குப் புரிவதில்லை. பசியால்வாடும் தோழர்கள் கண்முன்பாக டீக் கடையில் இரண்டு அல்லது மூன்று ரூபாயை வீசி எறிவதற்குத் தயங்காத கம்யூனிஸ்டுகளேயும் பார்த்தேன். கம்யூனிஸ்டுகள் கேவலம் உணர்ச்சி வயப்பட்டவர்களல்ல என்று சொல்லி தங்கள் செய்கையை ஆதரித்து அவர்கள் பேசுவதையும் நான் சில சமயம் பார்ப்பதுண்டு.

ஆனல் இம்மாதிரிப் பேச்சிலும் செயலிலும் ஈடுபடும் மனிதர்கள் கம்யூனிஸ்டு கட்சியிலிருந்து வெகு காலத்திற்கு முன்பே வெளியேறி விட்டார்கள் அல்லது வெளியேற்றப்படும்தருவாயில் இருக்கிருர்களென்று அறியும்போது 'அப்பாடா' என்று பெருமூச்சுவிட்டு, நான் மகிழ்ச்சியடைவேன். கம்யூனிஸ்டு கட்சியில் ஒழுக்க ஈனத்திற்குச் சிறிதுகூட இடமில்லை; தன்னைப்பற்றியே பெரிதாக எண்ணுபவர்களுக்கும் சுயகாரியப் புலிகளுக்கும் அப்படியே. தங்களைத் திருத்திக்கொள்ளும் சக்தி வாய்ந்தவர்களே அங்கே இருக்கிருர்கள்; தங்களைத் திருத்திக்கொள்ளவும் அபிவிருத்தி செய்துகொள்ளவும் அவர்களுக்கு ஏராளமான சந்தர்ப்பங்கள் அளிக்கப்படுகின்றன. தங்களைத் திருத்திக்கொள்ளாதவர்கள், அல்லது திருத்திக்கொள்ள முடியாதவர்கள், இவர்களைக் கட்சியிலிருந்து வெளியேற்றி விடுகிருர்கள்.

சிறையிலிருந்து அனந்த தாவும் கணேஷ் தாவும் கீழ்வருமாறு எனக்கு எழுதியிருக்கிருர்கள். "அனுதாப உணர்ச்சியும், உணர்ந்தறியும் சக்தியும் ஏராளமாக இருந்தாலொழிய கம்யூனிஸ்டாக இருப்பது சாத்தியமில்லை. உணர்வு என்பது ஒரு கெட்ட விஷயமல்ல."

1940 ஏப்ரல் மாதம் பி. ஏ. பரீட்சை எழுதிவிட்டு நான் திரும்ப கல்கத்தா வந்து சேர்ந்தேன்.

கிஸான் சபா ஆபீசில் நான் வேலை பார்க்கவேண்டும் என்றும், கொஞ்ச காலத்திற்குப் பிறகு டிராம்வே தொழிலாளர் சங்க ஆபீசில் முழு நேர ஊழியராக வேலை பார்க்கவேண்டும் என்றும், கட்சியிலிருந்து முடிவு செய்தார்கள். நான் மத்தியதர வகுப்பிலிருந்து வந்தவள். விவசாயியைப்பற்றியோ, தொழிலாளியைப் பற்றியோ, அவர்களது இயக்கத்தைப்பற்றியோ எனக்கு ஒன்றும் தெரியாது. அவர்களிடையே வேலை செய்யப் புகுமுன் அவர்களைப்பற்றிய உண்மைகள் ஓரளவேனும் தெரிந்கொள்வது அவசியமாக இருந்தது. அதே சமயத்தில் மார்க்ஸிஸத்தை எனக்குக் கற்றுக்கொடுப்பதற்கும் ஏற்பாடு செய்யப்பட்டது.

வெகுகாலம் சென்ற பிறகே, புத்தகங்களிலிருந்து மட்டுமே மார்க்ஸிஸத்தைத் தெரிந்துகொள்வது அல்லது ஒரு மார்க்ஸிய வாதியாகி விடுவது என்பது முடியாத காரியமென்று நான் உணர்ந்தேன்.

ஜூலையில், சயன்ஸ் கல்லூரியில் போஸ்ட் கிராட்ஜூவேட் பகுதியில் நான் சேர்ந்தேன். ஐரோப்பாவில் யுத்தம் அப்போது தான் ஆரம்பித்தது. ஏழு மாதத்திற்கு அப்பால், 24 மணி நேரத்திற்குள் கல்கத்தாவை விட்டுச்சென்று சிட்டகாங்கில் எனது வீட்டிலேயே சிறைவாசம் இருக்கவேண்டுமென்று சர்க்கார் உத்திர விட்டது.

இந்தச் சமயம் சட்டவிரோதமாகப் போன கட்சியின் அங்கங்களை ரகசியமாக நடத்துவது என்க்குக் கொடுக்கப்பட்ட வேலையாகும். மாகாணக் கமிட்டி, மத்தியக் கமிட்டி இவற்றின் சுற்றறிக்கைகள், புத்தகங்கள், பத்திரிக்கைகள் முதலியவற்றை இந்த ஜில்லாவிலுள்ள பல்வேறு பகுதிகளுக்கு அனுப்புவது, பற்பல பகுதிகளுக்கு ஊழியர்களை அனுப்ப ஏற்பாடு செய்வது, நகரத்தில் ஊழியர்கள் ரகசியமாகத் தங்குவதற்கான இடங்களை ஏற்பாடு செய்வது, பல்வேறு இடங்களில் துண்டுப் பிரசுரங்களை விநியோகிக்க ஏற்பாடுசெய்வது; இவற்றோடு சில வட்டாரங்களில் வகுப்பு நடத்துவது ஆகிய இவையெல்லாம் எனக்குக் கொடுத்த வேலையில் அடங்கியிருந்தன.

என்னை வீட்டிலேயே சிறைசெய்து வைத்திருந்தாலும் குடும்பத்தினர், வெளியிலுள்ளவர்கள் இவர்கள் பார்வையினின்றும் நழுவி, பக்கத்திலுள்ள வண்ணார்களின் சேரிக்கும் தோட்டிகளின் சேரிக்கும் சென்று பார்வையிடுவதும், அவர்கள் மூலம் எனது வேலைகளை முடித்துக்கொள்ளுவதும் எனக்குச் சாத்தியமாகவே இருந்தது. சமூகத்தில் ஏனைய பகுதிகளையெல்லாம் விடத் தாழ்ந்த பகுதியைச் சேர்ந்தவர்களான வண்ணார்கள், தோட்டிகளின் குழந்தைகள் இம்மாதிரியான வேலைகளைச் செய்ய முன்வருகிறார்கள், அல்லது அவர்கள் மூலம் நாம் வேலை பார்த்துக்கொள்ளமுடியும் என்பது போலீஸாரின் சிந்தனைசக்திக்கு அப்பாற்பட்ட விஷயமாகும். ஆதலால் குறிப்பிட்டபோது இடத்துக்கு வரும் இந்தக் குழந்தைகளோடு பேசுவதற்கு பல சந்தர்ப்பங்கள் எனக்கு இருந்தன.

மேலும் போலீஸ்காரர்களுக்கு நான் இன்னும் ஒரு பயங்கர வாதியாகவே இருந்தேன்; ரகசியமாக எந்த வேலையையும் பார்க்க முடியாத அளவுக்கு எல்லோரும் என்னை யறிந்திருந்தார்கள். ஆகையால் நான் ரகஸ்ய முறையில் வேலைசெய்யமுடியாது என்று

கணக்குப்போட்டது போலீஸ். போலீஸ்காரர்கள் மட்டும், எனது வேலைகளில் நேரடியாக கலந்துகொண்ட ஒரு சிலரைத் தவிர மற்ற எல்லோருமே நான் இந்த வேலைகளைச் செய்துவருகிறேன் என்று கனவில்கூட எண்ணவில்லை. போலீஸார் கணக்கு அம்மாதிரி போட்டு தவறியது, ஆனால் கட்சியின் கணக்குகள் சரியாயிருந்தன! ஒரு காலத்தில் பயங்கரவாதியாக இருந்த காரணத்தினால், ரகசியவேலைக்குப் பெரிதும் தகுதிவாய்ந்த ஒரு பெண்ணாகவே கட்சிக்கு நான் காட்சியளித்தேன்! போலீஸ்காரர்களான கணக்கு அப்படித்தான் இருக்கும் என்று எதிர்பார்த்தே, அது கட்சிக்கு ரொம்பப் பத்திரம் என்றும் கட்சியில் எண்ணினார்கள்!

1941ம் வருடக் கடைசியில், சிட்டகாங்கில் ஜப்பானின் படையெடுப்பு ஆபத்துப் பெரிதாகிவிட்டது. அதே சமயத்தில் என் மீதிருந்த கட்டுப்பாடுகளைப் போலீஸார் நீக்கிவிட்டார்கள். தற்பாதுகாப்புக்காக பெண்களின் ஸ்தாபனத்தை உருவாக்கிப்பலப் பலப்படுத்துகிற வேலையில் நாங்கள் முனைந்தோம். அதேகாலத்தில் ஜப்பான்-எதிர்ப்புப் பிரசாரமும் நாங்கள் செய்யத் துவங்கினோம். நாங்கள் செய்த இந்தச் சிறியப் பிரசார இயக்கத்தின் பயனாக எல்லா வட்டாரங்களிலிருந்தும் குறிப்பிடத்தக்க முறையில் ஆதரவு கிடைத்தது.

உயர்ந்த நிலையிலிருக்கும் மக்களுக்கும் நடுத்தர வர்க்கத்தாருக்கும் நாங்கள் சொன்னது இதுதான்: "உங்கள் கையிலேயே உருவாக்கி வளர்ந்திருக்கிற கல்வி, பண்பாடு, நாகரீகம் எல்லாம் ஜப்பான் படையெடுத்தால் மண்ணோடு மண்ணாகிவிடும். ஐம்பது வருடம் போராட்டத்தின் பயனாக பல கஷ்டங்களுக்கிடையே நீங்கள் கட்டிவளர்த்திருக்கிற மகத்தான இந்த தேசீய இயக்கத்தை ஜப்பானியர் ஈவிரக்கமின்றி வேரோடு களைந்தெறிந்துவிடுவார்கள்."

பொதுவாகப் பெண்களிடம் சென்று அவர்களை நாங்கள் கீழ்வருமாறு சொல்லத் தூண்டினோம். தற்பாதுகாப்புக்காகவும், உங்கள் மானத்தைப் பாதுகாத்துக்கொள்ளும் பொருட்டும் ஜப்பானியர்களை எதிர்த்துப் போர் புரிய நீங்கள் தயாராகவேண்டும். அதற்குக் காலம் வந்துவிட்டது."

விவசாயிகளிடையே நாங்கள் கீழ்வருமாறு விளக்கிச் சொன்னோம். "ஜப்பானை எதிர்த்துப் போர் புரிவது உங்களுடைய நன்மையையும், உங்களது சொத்தையும் நிலத்தையும் பாதுகாக்கச் செய்யும் போராகும்."

இந்தப் பிரசாரத்தின்மூலம் ஒவ்வொருவர் உள்ளத்திலும் சுரக்கும் இயல்பான தேசபக்தியையும், அடிமைத்தனத்தின்

மீதுள்ள வெறுப்பையும் தட்டி எழுப்ப முடிந்தது; ஏனெனில் ஜப்பான் படையெடுப்பு ரொம்ப உண்மையானது, எந்த நேரத்திலும் நேரலாம் என்று அவர்கள் எண்ணினார்கள். இவற்றின் காரணமாக, பொதுமக்கள் திரண்டுநின்ற ஸ்தாபனங்கள் ஆக்கத்திலும் செயலிலும் வளர்ச்சி யடைந்தன.

இவ்வளவு மகத்தான வரவேற்பைக் கண்டு எங்களுக்கும் ஒரு எழுச்சியும் உற்சாகமும் ஏற்பட்டது. தலைவருடன் இருந்ததிலிருந்து நாங்கள் கண்டுவந்த கனவு நனவாகும் தருணத்திலிருந்தது; சந்தர்ப்பங்கள் இவ்வளவு சிறந்த முறையில் ஒன்று சேர்ந்து வந்திருப்பது பயங்கரவாத நாட்களில் நாங்கள் செய்ய விரும்பியதை, அதாவது கொரில்லாப் போர் முறையைக் கையாண்டே ஆற்றல் வாய்ந்த எதிரியையும் தோற்கடித்துவிட முடியும் என்பதை, நிரூபிக்க எங்களுக்கு ஒரு நல்ல வாய்ப்பை யளித்தது.

1942 டிசம்பரில், பம்பாயில் முதல் கட்சிப் பள்ளிக்கூடத்திற்கு நாங்கள் வந்தோம்; எங்களது பலஹீனம் எங்கே இருந்தது என்பதைக் குறிப்பாக அங்கே எடுத்துக் காட்டியபோது எங்களுக்கு அதைத் தெரிந்துகொள்ள முடிந்தது. எங்களுக்கு ஜனங்கள் வரவேற்பளித்தார்கள் என்பது உண்மையே. எங்களுக்குப் பின் அவர்கள் திரண்டு நின்றார்கள் என்பதுகூட வாஸ்தவம்தான். ஆனால் இன்றைய சிக்கல்களில் அவர்கள் சிக்கிக் கொள்ளாதபடி பாதுகாக்கும் அளவுக்கு அவர்களிடையே நாங்கள் கொண்டுவந்த மாறுதல் எவ்வளவு அற்பமானது? இந்தக் கஷ்டங்களையெல்லாம் எதிர்த்துப் போராடுவதற்கு அவர்களுக்கு நாங்கள் ஊட்டிய பலம் எவ்வளவு குறைவானது?

பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தை தலைக்குமேல் வைத்துக்கொண்டிருப்பதன் காரணமாக, போரின் கடுமை தாங்காது தேசம் சீர்குலைந்து சிதறிவிடுவது நிச்சயம். தீவிரமான பொருளாதார நெருக்கடி ஏற்படுவதும் தவிர்க்க முடியாத காரியமே. தேசீய அரசாங்கம் இருந்தால் மட்டுமே நிலைமையைச் சமாளித்திருக்க முடியும்.

ஜப்பான் படையெடுப்பு நிகழும் என்கிற பயம் இருக்கிற இடத்தில் ஜப்பானுக்கு விரோதமான உணர்ச்சிகளைக் கிளப்பிவிடுவதும், நேராக எல்லோரும் பங்கெடுத்துக்கொள்ளுகிற முறையில் எதிர்த்துப் போராட வேண்டுமென்கிற உணர்ச்சியே மக்கள் மனதில் தோய வைப்பதும்கூட, எளிதான காரியமே. ஆனால் படையெடுப்புப் பயமில்லாத வேறு பகுதிகளிலுள்ள தேசபக்தர்களுக்கு இது பொருள் பொதிந்த விஷயமாகத் தோன்றமாட்டாது. அவர்களுக்குத் தெளிவாகத் தெரிகிற ஒரு

விஷயம் என்னவென்ருல் அன்னிய அரசாங்கத்தின்கீழ் கிடக்கும் வரைக்கும் அதிகமாக ஒன்றும் சாதிக்க முடியாது என்பதே.

தேசத்தில் இவ்வளவு பெரிய நெருக்கடி ஏற்பட்டிருக்கும் இந்தச் சமயத்தில் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் தேசத் தலைவர்களை சிறைக்குள் அடைத்து, தேசீய அரசாங்கம் இல்லையென்று மறுத்தது, ஜனங்களின் செயலற்ற நிலையையும் ஏமாற்றத்தையும் மேலும் அதிகப்படுத்தவே உதவியது. இந்த உணர்ச்சி நாடு முழுதும் பரவுவது நிச்சயம்.

கட்சிப் பள்ளியிலிருந்து நாங்கள் திரும்பிவந்து பார்த்தால், சிட்டகாங் முழுவதிலும் பஞ்சத்தின் சாயை படிந்து கிடந்தது. 1943-ம் வருஷம் ஆரம்பித்ததுமே, பசியின் கொடுமை தாங்காத ஆண்களும் பெண்களும் பிச்சை எடுக்க வீதிக்கு வந்து விட்டார்கள். இவர்களுக்கு கஞ்சி வார்ப்பதற்கு பல இடங்களில் நாங்கள் ஏற்பாடு செய்தோம். இன்னெரு பக்கத்தில், பசியால் துடிக்கும் மக்களுக்குக் கிடைக்காத அதே உணவைப் பேராசை கொண்ட வியாபாரிகள் ஒரேயடியாகக் கைப்பற்றிக்கொண்டிருந்ததையும் பார்த்தோம்.

மத்திய வகுப்பார் என்று சொல்லக்கூடியவர்களின் கூட்டம்—இதிலிருந்துதான் நாங்களும் வந்திருக்கிருேம்—தங்கள் மதிப்பை எல்லாம் இழந்துவிட்டது. அவர்களது செயல்கள் ஒழுக்கத்தோடு ஒட்டி ஒழுகவும் தவறின. விவசாயிகளின் கஷ்டத்தைக் கண்டு அவர்கள் அனுதாபப்பட்டபோதிலும், தங்களது அன்ருடத் தேவைகளைப் பூர்த்தி செய்துகொண்டு உணவைத் திருட்டுத்தனமாகக் குவித்து வைக்கும் கள்ள சேமிப்பாளர்களைப் பற்றி கவலை கொள்ளாது சமாதானமாக, 'நல்ல மனிதர்'களாக நடந்துகொண்டனர்.

நாங்கள் செய்த வேலை அவர்களது ஆசீர்வாதத்தைப் பெற்றது வாஸ்தவமே, தங்களது பலஹீனத்தைக் கண்டு வெட்கி எங்களுக்கு உதவி செய்ய பலர் முன்வந்தனர் என்பதும் உண்மையே. ஆனல் உணவைக் குவித்து வைப்பவனைச் சமூகத்திலிருந்து களைந்தெறிவதற்கு அவர்கள் தைரியமாக முன் நிற்கவில்லை. பஞ்ச காலத்திற்குப் பிறகு, உணவைக் குவித்து வைத்த ஆசாமிதான் மகா சக்தி வாய்ந்தவனுக மாறிவிட்டான். சிட்டகாங்கில் மட்டும் அநேகமாக இரண்டு லட்சம் பேர் இறந்தனர்; குடியானவர்கள் தங்கள் நிலத்தையும் சொத்துக்களையும் இழந்தனர்; அவர்களில் பலர் வேலை தேடி வெளியூர்களுக்குச் சென்றனர். அவர்களது பெண்கள் கூலிப் பட்டாளத்தில் (Labour Corps) வேலை செய்யவேண்டியதாயிற்று. பசிக் கொடுமை

தங்கள் மானத்தையும் விற்கும்படி அவர்களைத் துரத்தியது. அதற்குக் கைம்மாருக அவர்கள் பெற்ற பொருள் வியாதியே, உயிரைப் பறிக்கும் வியாதியே.

குழந்தைகள் குற்றமற்ற தன்மையுள்ளவர்கள் என்கிற பேச் செல்லாம் போய்விட்டது. தாய் தகப்பன், உற்ருர் உறவினர் என்கிற ஒன்றுமின்றி, கைவிடப்பட்ட நிலையில், இந்தக் குழந்தை கள் எல்லா இடங்களிலும் சுற்றித் திரிந்தார்கள். தூய்மை, இள கும்தன்மை எல்லாம் இந்தக் குழந்தைகள் முகத்தைவிட்டு எங்கோ போய்விட்டன ; அவற்றிற்குப் பதிலாக இயற்கைக்குமாருன ஒரு விபரீத நோக்கு அதில் குடி புகுந்தது. இந்தச் சிறு பிராயத்தி லேயே சம்பாதிக்க அவர்கள் கற்றுக்கொண்டிருக்கிருர்கள் ; பீடி, சிகரெட்டுகளை வாயில் வைத்துக்கொண்டும் ராணுவ வீரர்களிட மிருந்து வாங்கிய காசுகளைப் பையில் போட்டுக்கொண்டும் அவர் கள் சுற்றித் திரிகிருர்கள். சிலர் தங்கள் தாய்மாரையும் சகோதரி களையும் கூட்டிக்கொடுத்து அவர்கள் மானத்தில் வியாபாரம் செய்யும் தரகர்களாக மாறியிருக்கிருர்கள்.

வீடு, குடும்பம் என்கிற வார்த்தைகளுக்கு எவ்விதப் பொரு ளும் இருப்பதாக அவர்களுக்குத் தெரியவில்லை ; பயங்கரமான துர்நாற்றம் வீசும் நரகத்தில் வளர்ந்துவரும் அவர்களுக்கு வாழ்க் கையின் புனிதத்தன்மை எப்படித் தெரியும் ?

பெரிய மனிதர்கள் வீடுகளிலிருந்தும் அமைதி எங்கோ ஓடி விட்டது. உணவுக் கொள்ளைக்காரர்களை அவர்கள் செல்லுகிற வழியில் செல்ல விட்டுவிடுவதன்மூலம் தங்கள் அன்ருடத் தேவை களைப் பூர்த்திசெய்துகொள்ளலாம் என்று அவர்கள் எண்ணினுர் கள். ஆனல் அவர்களது இந்தத் தேவைகள் மேன்மேலும் வளர் ந்துகொண்டே செல்கின்றன. படிப்படியாகப் பணிந்து சென்று இறுதியில் அவர்கள் இதே கொள்ளைக்காரர்களின் போக்கை அதட்டிக் கேட்க அசக்தர்களாகி வருகிருர்கள். நீண்டநாளாகப் போற்றிவந்த சுயமரியாதையை அவர்கள் இழந்துவிட்டார்கள் ; அவர்களது வீடுகளிலோ அதிருப்தியும் அமைதியின்மையும் அதி கப்பட்டு வருகிறது. அவர்கள் மக்களும், அவர்களுமே, ஒழுக்க உணர்ச்சிகளெல்லாம் தேய்பிறையாகின்றன. ஒழுக்க ஈனம் என்கிற பாதையில் காலடி வைக்கவும் தொடங்கி விட்டார்கள்.

எந்த வேலைக்கும் அவர்களை ஒன்றுதிரட்ட முடியாது ; ரொம்ப அதிகமாகப் போனல் அவர்கள் சொல்லுவது இதுதான் : "நாங்கள் ஒன்றுக்கும் உதவாதவர்கள்" அல்லது "எங்களுக்கு ஏதாவது செய்யுங்கள்."



மானத்தை விற்று வயிறு வளர்த்த கொடுமை !



கல்பனா தத்

குடும்பம் குலைந்து போயிற்று !

சிட்டகாங்கில் கம்யூனிஸ்டு கட்சிக்குவந்த எங்களில் பெரும்பாலோர் பயங்கர வாதிகளாக இருந்தவர்கள்; கம்யூனிஸத்தை ஒப்புக்கொண்டு விட்டோம். கம்யூனிஸ்டு என்று சொல்லிக்கொள்வதில் பெருமையடைகிறோம் என்றாலும், எங்களது சிந்தனைப் போக்கிலும் செயல் முறையிலும் தனிப்பட்ட நபர்களின் செயலை அடிப்படையாகக் கொண்ட பயங்கர வாதத்தின் சாயையே படிந்து கிடந்தது; 1930-1931ல் நாங்கள், ஒரு சில இளைஞர்கள், எங்கள் சொந்த பலத்தில் நம்பிக்கைவைத்து பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தை எதிர்த்துப் போராட முன் வந்தோம். ஆனால் கம்யூனிஸ்டு கட்சியில் சேர்ந்து வெகுநாள் சென்றபிறகும், 1943-ம் வருஷத்தின் இருள்படர்ந்த காலத்திலும்கூட, எங்களது பழைய மனப்போக்கையே காட்டி விட்டோம்; ஜனங்கள்மீது கவிழ்ந்து வந்த அந்தப் பேராபத்தை எங்களது சொந்த பலத்தினாலேயே நீக்கிவிட முடியும் என்று—வெளிப்படையாக அப்படியில்லையென்று எவ்வளவுதான் சொல்லிக்கொண்ட போதிலும்—நாங்கள் கள்ளத்தனமாக நம்பினோம்.

ஆனால் 1943-ம் வருஷம் 1930-ம் வருஷம் அல்ல. 1930-ல், எவ்வளவு சிறிதாக இருப்பினும், நாங்கள் அடைந்த வெற்றிக்குக் காரணம் ஜனங்கள் எங்களுக்குப் பின்னால் இருந்தார்கள் என்பதே. மேலும் அது சர்க்காரை பரம்பரை பரம்பரையாக எதிர்த்துவந்த நேரான போராட்டமாகவும் இருந்தது.

ஆனால் இப்போது நிலைமை மிகச்சிக்கலாகிவிட்டது. ஜனங்களிடம் அவநம்பிக்கையும் செயலற்று நிற்கும் உணர்ச்சியும் குடிகொண்டிருக்கின்றன; நமது ஜனங்களிடையிலேயே எதிரிகள் முளைத்துவிட்டார்கள். அவர்களைக் கண்டுபிடிப்பதும் இனம் தெரிந்துகொள்ளுவதும் துர்லபம். ஆதலால் இந்த உண்மையைச் சொன்னாலும் பிறர் நம்ப மறுக்கிறார்கள். இந்த நிலையில் நாடு முன்னைவிடப் பத்து மடங்கு இப்போது மோசமடைந்திருக்கிறது. ஆதலால் எங்கள் பலம் மட்டும் போதவில்லையென்பது இயல்பாகத் தெரிகிற விஷயமே.

கிராமங்களிலுள்ள தோழர்களில் பலர் கடுமையான நோய் வாய்ப்பட்டதன் காரணமாக வேலை செய்யமுடியவில்லை. நானும் நோய்க்கு உள்ளாகி ஒரு வேலையும் செய்யமுடியாமலிருந்தேன். கட்சிக்குள் நிலைமை மோசமடைய ஆரம்பித்தது; அவநம்பிக்கையும் ஏமாற்றமும் சில தோழர்களைக்கூட பற்றிக்கொண்டன. கட்சியிலிருந்து வெளியேறினார்கள். இப்போது, இவ்வளவு கடுமையான அநுபவத்திற்கு பிறகு, நாங்கள் எங்கே தவறிழைத்தோம்,

எங்கள் கணக்கில் எங்கே விட்டுப்போயிருக்கிறது என்பதை உணர்ந்தோம்.

நமது ஜனங்கள்மீது எங்களுக்குள்ள அன்பு ஆழமற்ற மேற்பூச்சான ஒரு உணர்ச்சியே என்பது தெரிந்தது. ஜனங்களைப் பற்றி எங்களுக்கு ஒன்றும்தெரியாது, அவர்களது வாழ்க்கையைப் பற்றியும் அவர்களைப்பற்றியும் எங்களுக்கு அறிவோ அநுபவமோ ஒன்றும் இல்லை. இதயத்தைப் பிளக்கும்படியான கஷ்டத்தை ஜனங்கள் அநுபவிப்பதைக் கண்டு, எங்கள் மனம் அவர்களை நாடிச் சென்றது. அவர்களது கஷ்டத்தைக் குறைப்பதற்கு எங்களை ஈர்த்துச்சென்ற அநுதாபத்திலிருந்து திடீரென்று தோன்றிய உணர்ச்சியே நாங்கள் அவர்கள்பால் கொண்டிருந்த அன்பு. அதற்குமேல் அதைப்பற்றிச் சொல்வதற்கில்லை. அவர்கள் கஷ்டத்தைக் கண்டு அவர்கள் மீது எங்களுக்கு அநுதாபம் பிறந்தது. ஆனால் ஜனங்களின் வாழ்க்கையைப்பற்றிய ஞானம் எங்களுக்கு இல்லை.

அது காரணமாகவே, நெருக்கடி என்கிற வெள்ளம் மடை திறந்து சென்ற காலத்தில், தாங்கமுடியாத அளவுக்கு ஜனங்களுக்குத் துன்பமும் சேதமும் ஏற்பட்டகாலத்தில், அதை எங்களால் கூட எதிர்பார்க்கமுடியவில்லை. என்ன செய்வதென்று தெரியாமல் அப்படியே நாங்கள் ஸ்தம்பித்துப்போய்விட்டோம். மார்க்ஸிஸம் என்பது தொட்டதையெல்லாம் பொன்னாக்கக்கூடியதோ அல்லது சந்திரனைக்கொண்டுவந்து தரக்கூடிய மந்திரமல்ல என்பதை அன்று உணர்ந்தோம். வாழ்க்கையிலிருந்து கற்றுக்கொண்ட இரக்கமற்ற கடுமையான பாடங்களின்மூலம் மார்க்ஸிஸம் சமுதாயத்தை ஜனங்களின் வாழ்க்கைமுன், தெரிந்துகொள்ளுவதற்கு உதவிசெய்யும் ஒரு விஞ்ஞான தத்துவம் என்று உணர்ந்துகொண்டோம். கட்சிப் பள்ளிக்கூடத்தில் இன்னின்ன நிகழும் என்று முன்கூட்டியே சொல்லி எங்களுக்கு எச்சரிக்கை செய்த விஷயங்களெல்லாம் ஒன்றன்பின் ஒன்றாகப் பூர்த்தியாகிக் கொண்டுவந்தன.

வாழ்க்கையின் இந்தக் கடுமையான அநுபவத்திலிருந்து கம்யூனிஸமே உண்மையான தேசபக்தி என்பதை அறிந்தோம்; தேசப்பற்று என்பது ஆழமற்ற மேற்பூச்சான உணர்ச்சியை அடிப்படையாகக்கொண்டு ஜனங்களிடத்தில் நம்பிக்கை வைப்பதல்ல; கண்ணை மூடிக்கொண்டு தலைவர்களைப் பின்பற்றுவதும் தேசபக்தி ஆகிவிடாது. தங்களது தலைவிதியை நிர்ணயிக்கும் தலைவர்கள் தாங்களே என்ற தன்னம்பிக்கையை, தங்களது எதிர்காலத்தைச் சிருஷ்டிப்பவர்கள் தாங்களே என்ற உணர்ச்சியை

ஜனங்களின் உள்ளத்தில் எழுப்புவதே, உண்மையான தேசபக்தியாகும் என்று தெரிந்துகொண்டோம்.

பயங்கரவாதம் எங்கள்மீது எங்களுக்கு நம்பிக்கையை ஊட்டியது, கம்யூனிஸம் ஜனங்கள்மீது எங்களுக்கு நம்பிக்கையளித்தது. பயங்கரவாதம் எங்கள் சொந்த குணநலன்களேயே நம்பும்படி எங்களுக்குக் கற்றுக்கொடுக்கிறது; கம்யூனிஸம் இதற்கும் ஒரு படி அப்பால் சென்று, ஜனங்களேயும் நாட்டையும் பற்றித் தெரிந்துகொள்ளவும், அத்துடன் ஜனங்களே மாற்றவும், அவர்களோடு எங்களேயே மாற்றிக்கொள்ளவும் கற்பிக்கிறது.

இதையும் நாங்கள் பார்த்திருக்கிறேம். ஜனங்களின் விரோதியை எதிர்த்து நாங்கள் ஒன்று திரண்டு போரிட்டோமல்லவா, நாங்கள் செய்த இந்தச் சிறிய பணிக்கு ஜனங்கள் எங்கள்மீது புகழ்மாரி சொரிவதில் கொஞ்சம்கூடச் சிக்கனம் காட்டவில்லே. சிட்டகாங் நகரில் பங்கீடு கொண்டுவரப்பட்டதும், "கம்யூனிஸ்டுகள்தான் பங்கீட்டுக்காக உண்மையிலேயே போரிட்டவர்கள்", என்று எல்லோரும் ஒரு குரலில் சொன்னார்கள்; ஜனங்களுக்குச் சேவை புரியும் ஒவ்வொரு விஷயத்திலும் கம்யூனிஸ்டுகள் தன்னலமற்ற முறையில் தாங்களாகவே பங்குகொள்ளுகிறார்களென்பதை எல்லோரும் அங்கீகரிக்கிறார்கள். நாங்கள் செய்த ஜப்பான்—எதிர்ப்புப் பிரசாரமும், தற்பாதுகாப்பை யொட்டி எதிர்த்துப் போராடவேண்டுமென்ற எங்கள் பிரசாரமும் அராஜகப்பாதைக்கு ஜனங்களே இழுத்துச் செல்லாமல் காப்பாற்றின. தாங்கமுடியாத கஷ்டமும் துன்பமும் ஜனங்களே வாட்டிய இந்த மோசமான நாட்களிலும் அவைகளுக்குத் தலே பணிய மறுத்து எதிர்த்துநின்று போர்புரியும் மகத்தான குணம் ஜனங்களிடையே மறைந்து கிடக்கிறது என்பதை நாங்கள் பார்த்தோம்.

தோழர் **அநங்க சென்னின்** தந்தையாருக்கு எழுபதாவது வயதாகிறது அவர் கம்யூனிஸ்டு அல்ல, கம்யூனிஸத்தில் நம்பிக்கை கொண்டவரும் அல்ல. குபேராவில் உள்ள பாலர் பள்ளியில் அவர் ஒரு சாமானிய உபாத்தியாயராக இருக்கிறார். பஞ்சமும், துன்பமும் வருத்திய காலத்தில் ஆசிரியர்களில் பெரும்பாலோர் பள்ளியையே விட்டுப் போய்விட்டார்கள். பள்ளிக்கூடத்திற்குப் போதிய வருவாய் இல்லாதகாரணம்தான். அவர் நல்ல திறமை வாய்ந்த உபாத்தியாயர். பல உயர்ந்தப் பள்ளிக்கூடங்கள் அவரை வந்து சேரும்படி வேண்டிக் கொள்ளுகின்றன என்பது யாவரும் அறிந்த விஷயம். ஆனல் அந்த கிராமத்திலுள்ள பாலர் பள்ளியை விட்டு வெளியேபோக அவர் விரும்பவில்லே. பஞ்சத்தின்போது, உணவு கிடைக்காமல் பலதரம் அவர் பட்டினி கிடக்க

நேர்ந்தது; பலதரம் கஞ்சி வார்க்கும் இடத்திற்குச் சென்று கஞ்சியை உண்ணும் நிலைமை ஏற்பட்டது. இருந்தாலும் உயர்ந்த சம்பளத்தில் தங்கள் பள்ளிக்கூடத்திற்கு வந்துவிடும்படி யாராவது சொன்னால், "நான் சென்றுவிட்டால் இந்தப் பள்ளிக்கூடம் நடக்காது" என்று சொல்லி அவர்கள் வேண்டுகோளை நிராகரித்து விடுகிறார்.

எங்கள் ஜில்லாக் காரியதரிசி, தோழர் யஷோதா சக்ரவர்த்தியின் தகப்பனார் இருக்கிறார். மோக்ஷதா, பிரியதா என்ற அவரது இரண்டு குமாரர்கள் பாதுவா கொள்ளைக் கேஸ் சம்பந்தமாக, ஜீவிய தண்டனை பெற்று இன்னும் சிறையில் வாடிக்கொண்டிருக்கிறார்கள். சில தினங்களுக்கு முன், அவரது ஒரே பேரப்பிள்ளையும் இறந்து விட்டான். குடும்பத்தில் சம்பாதிப்பவர்கள் ஒருவரும் இல்லை. ஆனால் இந்தக் குடும்பத்திலுள்ளவர்களின் கஷ்டத்தையும், வறுமையையும் சொல்லி முடியாது. இருந்தாலும், தீய வழியிலே ஒரு நிமிஷம்கூட அவர் சென்றதில்லை. தனது பழைய குருக்கள் வேலையைத்தான் அவர் இன்னும் பார்த்து வருகிறார். துன்பங்களின் சுமை தாங்க முடியாததாயிருப்பினும், தன் மதிப்பினின்று ஊறிய ஒரு உறுதியோடு அவர் இருந்து வருகிறார். சமூகம் இவரது பெருந் தன்மைக்குமுன் தலை வணங்காது இருக்க முடியாது.

இது மத்திய வர்க்கத்தைப் பற்றியது. ஆனால் பெருந்தன்மை மத்திய வர்க்கத்தோடு மட்டும் நின்றுவிடவில்லை. பிரசன்னபாலா என்ற பெண்மணி விவசாய குடும்பத்தில் பிறந்தவர். அவர் மத்திய வயதடைந்த ஒரு விதவை. ரௌஜன்தாணுவில் மாதர் சங்கத்தில் 250 பெண்களைச் சேர்த்தவர் இவரே. அவர்களில் எல்லோருமே துன்பத்திலடிபட்டிருந்தார்கள் என்ற போதிலும் அவர்களில் ஒருவர்கூட கிராமத்தைவிட்டு வெளியேற அந்த அம்மையார் அனுமதிக்கவில்லை. ஆனால் அங்குள்ள வீடுகளில் வேலை செய்து அவர்கள் தங்கள் கஷ்டத்தை எப்படியோ சகித்துக் கொண்டார்கள். உணவுப் பஞ்சத்திற்குப்பின் துணிப் பஞ்சம் வந்தது. கஷ்டத்திற்குள்ளான இந்தப் பெண்கள் ஏதோ தங்கள் வயிற்றுப் பிழைப்புக்காக இரண்டு காசு சம்பாதிப்பதற்கு இந்த துணிப்பஞ்சம் தடையாக நின்றது. தாங்கள் கட்டி இருக்கும் இந்த வோடு வீட்டை விட்டு வெளிவருவதே அவர்களுக்கு அசாத்தியமாகப் போய்விட்டது.

அவர்கள் எல்லோரும் சேர்ந்து நகரத்திலுள்ள ஜில்லா மாஜிஸ்டிரேட்டிடம் தூதுபோகவேண்டும் என்று பிரசன்னபாலா முடிவு செய்தார்.

ஸ்தலத்திலுள்ள சர்க்கிள் ஆபீஸர் இந்தத் திட்டத்தைக் கேட்டு இந்தத் தூதுகோஷ்டியின் தலைவியான பிரசன்னபாலாவுக்கு ஒரு ஜோடி சேலையை லஞ்சமாகக் கொடுத்து இந்தத் திட்டத்தைக் கை விடும்படி சொன்னார். "எனக்குத் துணி கொடுப்பதனால் எங்கள் எல்லோருடைய மானத்தையும் காப்பாற்றிக் கொள்ள முடியாது" என்று பிரசன்னபாலா சொல்லி, அந்தத் துணியை சர்க்கிள் ஆபீஸரின் முகத்திலேயே வீசி எறிந்தார். அந்தத் துணியைப் பெற்றுக் கொள்ளாமலே அவர் வீடு திரும்பினார். பிறகு எல்லாப் பெண்களையும் தன்னோடு மாஜிஸ்டிரேட்டுக்குமுன் அழைத்துச் சென்று, மாஜிஸ்டிரேட்டிடம் பலவந்தமாக வாக்குறுதி வாங்கிக் கொண்டு திரும்பினார்.

தேவையும் துன்பமும் சேர்ந்துதான் சரளாவை தொழிலாளர் பட்டாளத்திற்கு (Labour Corps) விரட்டியது. ஒருநாள் வேலை பார்க்கச் செல்லும்பொழுது பாதையில் பெற்றோரால் கை விடப்பட்ட குழந்தை ஒன்று ரோட்டுக்கு பக்கத்தில் கிடப்பதை சரளா கண்டாள். அந்தக் குழந்தையை வளர்க்கும் நோக்கத்தோடு வீட்டுக்குக் கொண்டுவந்தாள். அவளை நான் பார்க்கச் சென்றபோது, "இவனை துர்ப்பாக்கியம் பிடித்த பெற்றோர்கள் விட்டுப்போயிருக்கவேண்டும்; ஒருவேளை இவனுக்கு உணவு தர இயலவில்லையே என்று அப்படிச் செய்திருக்கலாம். இப்போது நான் ஏதோ இரண்டு காசு சம்பாதிக்கிறேன். ஆதலால் இவனுக்குத் தாயாக இருந்து வளர்க்கலாம் என்றெண்ணத்தில் கொண்டு வந்திருக்கிறேன்," என்று அவள் அன்பு ததும்பும் குரலில் சொன்னாள்.

இம்மாதிரி உதாரணங்கள் அதிகமில்லாமலிருக்கலாம். ஆனால் நமது ஜனங்கள் சாகவில்லை, அவர்கள் தேசபக்தி என்றும் சாகாது என்பதை இந்த உதாரணங்களின் மூலம் நாம் அறிகிறோம். பசியோடும், துன்பத்தோடும் இடைவிடாமல் போராடி வருகிற நிலையில், யமன் பாசக்கயிறை கழுத்தில் போட்டிருக்கும் இந்தச் சமயத்தில், நமது ஆண்களும் பெண்மணிகளும் பெருந்தன்மையின் இவ்வளவு உன்னதமான நிலையை எட்டியிருக்கிறார்கள். அவர்களுக்கு தனக்குத் தானே உதவி செய்துகொள்வதென்பது புத்தகத்தில் படித்து தெரிந்துகொள்ளுகிற விஷயமல்ல. ஆனால் அது அவர்களது வாழ்க்கையின் அம்சமாகவே போய் விடுகிறது. இம்மாதிரி பெருந்தன்மைக்கு அழிவு என்பதே கிடையாது.

தங்களைமட்டும் அவர்கள் காப்பாற்றிக்கொள்ள முயன்றார்கள், அல்லது அதில் வெற்றியடைந்தார்கள் என்பதில்லை. அவர்கள் சமூகம் முழுவதையுமே காப்பாற்ற முடியும், நமது ஜனங்க

ளுக்குத் தன்னம்பிக்கையே ஊட்டமுடியும், நமது சமூகத்தையே மாற்றி அமைத்துவிடமுடியும். அதன் பயனை வாழ்க்கை திரும்பவும் அமைதியாகவும் திருப்தியாகவும் செய்வது எங்கள் எழில் நிறைந்த சிட்டகாங்கில் சாத்தியமாகும்.

எங்கள் கட்சியின்மீது நம்பிக்கையும் மரியாதையும் அன்பும் பன்மடங்காக பெருகுகிறது. எங்கள் கட்சி ஒன்றே வாழ்க்கையைச் சம்பூரணமான நிலைமையில் அறிந்துகொள்ளவும், விளக்கப் படுத்தவும் உதவியாயிருப்பது, எங்கள் கட்சி ஒன்றே ஜனங்களின் எதிரிகளோடு போராட முன்வருவது, எங்கள் கட்சி ஒன்றே ஜனங்களிடமுள்ள நம்பிக்கை ஒரு கணமேனும் இழக்காமலிருப்பது என்று நாங்கள் பெருமையோடு கூறிக்கொள்ளமுடியும்.

நான் சிறையிலிருந்து விடுதலையாகி வந்த சமயத்தில் பழைய தோழர்களில் பெரும்பாலோர் செயலற்ற நிலைமைக்கு சென்று விட்டார்கள், ஒரு சிலர் புதிய இழுக்குகளை உருவாக்குவதில் ஈடு பட்டிருந்தார்கள் என்று குறிப்பிட்டேன் அல்லவா? அவர்களில் சிலர் இன்று நல்ல லாபம் தட்டும் கண்டிராக்டர்களாக மாறியிருக்கிறார்கள், எஞ்சியிருப்போர் கள்ளமார்க்கெட் காரர்களாக காட்சி யளிக்கிறார்கள்.

'பாஞ்சஜன்யா' என்ற சிட்டகாங் தினசரி ஒருகாலத்தில் தேசபக்தியை அடிப்படையாகக் கொண்ட பத்திரிகை என்று பேரும் புகழும்பெற்று விளங்கியதோடு, ஆயுதச்சாலைச் சூறை விசாரணை விபரங்களை வெளியிட்டு, பணத்தையும் குவியலாகக் குவித்தது. ஆனால் அதே பத்திரிகை அதே ஆயுதச் சாலையை சூறையிட்ட தலைவர்கள் இன்று விடுதலை மறுக்கப்பட்டு வருவதைப்பற்றி, ஒரு வார்த்தைகூட எழுதவில்லை. இந்த அலட்சியம் அது எவ்வளவு கேவலமான நிலைக்குச் சென்றுவிட்டதென்பதையே காட்டுகிறது.

இன்று எல்லா அடக்குமுறையும், அநியாயங்களையும் எதிர்ப்போம் என்று தைரியமாகவும், தயவு தாட்சண்யமின்றியும் அறிவிக்கிற கட்சி ஒன்று உண்டென்றால் அது கம்யூனிஸ்ட் கட்சியே. கட்சிப் பத்திரிகைகள் மூலம், ஜனங்களின் வாஸ்தவமான எதிரிகள் யார் என்பதையும், யாருக்கு எதிராக இன்று ஜனங்கள் போராடுகிறார்கள் என்பதையும் கம்யூனிஸ்ட் கட்சி வெளியிடுகிறது. தேசபக்தியின் அடிப்படையில் எழுந்த பரம்பரையை, மாஸ்டர் தாவின் பரம்பரையைக் கடைப்பிடித்து நாம் எப்படி முன்னேறிச் செல்லமுடியும் என்பதையும், ஜனங்களிடம் பூரண நம்பிக்கை வைப்பதன் மூலம் நம்மிடத்திலேயே நமக்கு எப்படி உறுதியான நம்பிக்கை ஏற்படுதல் கூடும் என்பதையும் நமக்குக் கற்பித்த கட்சி கம்யூனிஸ்ட் கட்சியே.

# அன்று எல்லோரும் எங்கள் பக்கம்....

............

புதிய இந்திய அரசியலமைப்பை 1937-ல் ஏற்று அரசாங்கத்தை நடத்த முனைந்தபோது, ஒவ்வொரு மாகாணத்திலும் மந்திரி சபை நமது கைக்கு வந்ததல்லவா? அந்தக் காலத்தில், நாடு கடத்தப்பட்ட தங்கள் குழந்தைகள் விடுதலை பெற்று வீட்டுக்கு வந்து விடுவார்கள் என்று நமது ஜனங்கள் நம்பினார்கள்.

சிறைக் கம்பிகளுக்குப் பின்னே இருந்த எங்கள் ஆனந்தத்திற்கும், நம்பிக்கைக்கும் ஒரு எல்லை இல்லை என்று சொல்லும்படி இருந்தது. குறைந்தது ஏழு மாகாணங்களில் காங்கிரஸ் மந்திரி சபை இல்லாவிட்டாலும் நமது நாட்டு மக்களாகிய மந்திரி சபைகளே ஆட்சி புரிகின்றன என்று எண்ணியபோது, 'இனி நமக்கு உடனே விடுதலைதான்' என்ற மகிழ்ச்சியில் எங்களுக்கு ஒன்றும் தலைகால் புரியவில்லை. இந்த ஒரு எண்ணமே எங்கள் மனதை நிரப்பிவிட்டதனால், அங்கே வேறு எண்ணங்கள் புகுவதற்கு இடமில்லையென்று சொல்லும்படி அவ்வளவு பரிபூர்ணமாக இருந்தது.

கோமில்லா மாஜிஸ்ட்ரேட் ஸ்டீவன்ஸைக் கொலைபுரிந்த குற்றத்திற்காக **சாந்திக்கும், சுநீதிக்கும்** ஜீவிய தண்டனை விதித்த காலத்தில், "தண்டனை என்னவோ வாழ்நாள் முழுதும்தான் என்றாலும், நீங்கள் நீண்டகாலம் சிறையிலிருக்கும்படி நேராது. புதிய அரசியல் அமைப்பு அமுலுக்கு வரும்போது பொது மன்னிப்பும் ஏற்படுமாகையால், நீங்கள் எல்லாம் விடுதலையடைந்து விடுவீர்கள்," என்று அவர்களுக்கு வக்கீலாக இருந்த ஸ்ரீமான் பி. ஸி. சாட்டர்ஜி சொன்னாராம்.

ஆதலால், நாங்கள் அபாரமான நம்பிக்கை கொண்டிருந்ததற்கு காரணம் இல்லை என்று சொல்ல முடியாது.

ஆனால் மாகாண அரசாங்கங்கள் இந்தத் துறையில் எவ்வித முயற்சியும் எடுத்துக் கொண்டதாகத் தோன்றவில்லை.

நீண்டகாலம் காத்திருந்த பின்னர், மூன்று கோரிக்கைகளை முன் வைத்து அவற்றை ஏற்றுக் கொள்ளாத வரையில் நாங்கள் உணவு உட்கொள்ளமாட்டோம் என்று அந்தமான் கைதிகள் உண்ணாவிரதம் பூண்டனர். அந்த மூன்று கோரிக்கைகளும் பின் வருமாறு: (1) அந்தமான் தீவிலிருந்து அவர்களை இந்தியாவுக்குக் கொண்டுவர வேண்டும். (2) எல்லா அரசியல் கைதிகளையும் இரண்டாவது வகுப்பிலேயே வைக்கவேண்டும். (3) எல்லோரையும் விடுதலை செய்யவேண்டும். அந்தமான் கைதிகளுக்கு நாங்கள் ஆதரவாக நிற்கிறோம். என்பதைக் காட்டும் அறிகுறியாக இந்திய ஜெயில்களிலுள்ள கைதிகள் யாவரும் அதே சமயத்தில் உண்ணாவிரதத்தை ஆரம்பித்தார்கள்.

இந்தக் கைதிகளின் கோரிக்கைகளுக்குப் பூரண ஆதரவளித்து, நாடு முழுதும் மகத்தான ஒரு இயக்கம் ஆரம்பமாயிற்று. ஹிமய மலையிலிருந்து, கன்னியா குமரி வரையில் நாடெங்கும் கோடிக் கணக்கான மக்கள் இதை வெகு ஆவலோடு கவனித்து வந்தார்கள். எங்களுக்காகப் பரிந்துபேச காந்திஜியும் இதர தலைவர்களும் முன் வந்தார்கள்.

முதல் இரண்டு கோரிக்கைகளையும் உடனடியாகவே திருப்தி செய்து விடுவதாகவும், மூன்றாவது கோரிக்கையைப் பிறகுதான் கவனிக்க முடியும் என்று வங்காள அரசாங்கம் வாக்குறுதியளித்தது.

“இன்னும் ஒரு வருஷத்தில் உங்களை இந்தியாவுக்கு மீட்டு விடுகிறேன், இப்போது உண்ணாவிரதத்தை விட்டுவிடுங்கள்” என்று காந்திஜி கைதிகளுக்குச் செய்தி சொல்லி அனுப்பினார்.

1937, நவம்பர் முதல், அந்தமான் கைதிகளை இந்தியாவுக்கு மீண்டும் கொண்டுவருகிற வேலை ஆரம்பித்தது. வங்கத் தாயின் புதல்வர்கள் வங்காளச் சிறைகளுக்கே வந்து சேர்ந்தார்கள்.

1938-ம் வருஷ ஆரம்பத்தில், எனது தந்தை, ஜெயிலுக்கு என்னைப் பார்க்கவந்தபோது, ரவீந்திரநாத் தாகூர் எனது விடுதலையின் பொருட்டு கவர்னரோடு பேச்சுவார்த்தைகள் நடத்தி வருகிறார் என்று சொல்லி, தந்தையாருக்கு ரவீந்திர நாத்தின் சொந்தக் கையினால் சுருக்கமாக எழுதிய ஒரு கடிதத்தையும் காட்டினார். “உங்கள் பெண்ணுக்காக நான் செய்யக்கூடியதையெல்லாம் செய்திருக்கிறேன். அதன் முடிவு இன்னும் தெரியவில்லை. முயற்சி வீணாகாதென்றே நம்புகிறேன்” என்று அந்தக் கடிதத்தில் எழுதியிருந்தது. என்னை ஆசீர்வதித்துச் சில வரிகள்

அவர் எழுதியிருப்பதையும் நான் கண்டேன். எங்களைச் சிறையினின்றும் மீட்பதற்கு சி. எப். ஆண்ட்ரூஸ் பெருமுயற்சி செய்து வருகிறார் என்றும் தந்தை என்னிடம் சொன்னார்.

"உங்கள் பெண் சம்பந்தமாக கவர்னரைச் சந்திக்கச் செல்கிறேன். தூது வெற்றி யடையும்பொருட்டு சந்திப்பு காலத்தில் கடவுளைப் பிரார்த்தியுங்கள்," என்று ஒரு இடத்தில் அவர் தந்தைக்கு எழுதினார். நான் விடுதலையாகும் தினத்தன்று தந்திமூலம் தகவல் தெரிவிக்கும்படியும் அவர் என் தந்தையிடம் சொன்னாராம்.

எல்லாக் கைதிகளுக்கும் தன்னாலானதைச் செய்வதாக வாக்களித்திருந்த காந்திஜியையும் தகப்பனார் போய்க் கண்டார். இதற்கிடையில் நாங்களும் காந்திஜியைச் சிறையில் சந்தித்தோம். பல விஷயங்களுக் கிடையே, அப்போது உள்நாட்டு மந்திரியாக இருந்த நாஜிமுதீன், ஆயுதச்சாலைச் சூறை வழக்குக் கைதிகளை—நான்—உள்பட விடுவிக்க விரும்பவில்லை யென்றும் இருப்பினும் தான் தன்னாலான முயற்சியை எல்லாம் செய்வதாகவும் காந்திஜி சொன்னார்.

இதைக் கேட்டு எனக்கு உற்சாகக் குறைவு ஒன்றும் ஏற்படவில்லை. எப்படியும் நான் விடுதலையாகிவிடுவேன் என்ற நம்பிக்கைமட்டும் எனக்கு உறுதியாக இருந்தது. குருதேவ் ரவீந்தரநாதரைப் போன்ற பெரிய மனிதர் ஒருவர் எங்களுடைய விடுதலைக்காகப் போராடிக்கொண்டிருந்தார். சி. எப். ஆண்ட்ரூஸ் போன்ற அந்நியர் ஒருவர் கைதிகளின் நியாயமான கோரிக்கைகளை முற்றுப்பெறுவோம் என்பதற்குத் தன்னாலானதை யெல்லாம் செய்யத் தயாராயிருந்தார் என்றால், எங்களுக்கு எப்படி விடுதலை கிடைக்காமல் போகும்?

பெண்மக்களாகிய நாங்கள் எல்லோரும் விடுதலையடைந்தோம், காவற்கைதிகளும் விடுதலை பெற்றனர். ஆனால் தண்டனையடைந்தவர்களில் ஒரு சிலரே விடுவிக்கப்பட்டனர்.

நான் விடுதலையடைந்ததும், ரவீந்திரநாதரும், ஆண்ட்ரூஸும் எனது விடுதலைக்காகச் செய்த முயற்சிகளுக்காக அவர்களுக்கு கடிதம்மூலம் எனது நன்றியைத் தெரிவித்துக்கொண்டேன். குருதேவ் பின்வரும் பதிலை எழுதினார்.

"உனது கடிதத்தைக்கண்டு மகிழ்ச்சியடைகிறேன். நீண்ட நாட்களுக்குப் பிறகு நீ விடுதலை பெற்றிருக்கிறாய். நாள்தோறும் அமைதியும் ஆக்கமும் பெற்று

வளர்வாயாக. நமது நாட்டில் இன்னும் எத்தனையோ காரியங்கள் செய்ய இருக்கின்றன. அவற்றிற்கு கலவர மடையாமல் ஒழுங்கிப் பயின்ற திண்ணிய மனது தேவை. நீ பெற்ற துன்பமயமான அநுபவம் உனது வாழ்க்கைக்குப் பூரணப் பொலிவை அளிக்கட்டும். எனது ஆசீர்வாதம் இதுவே.

உனது நன்மையை விரும்பும்,

24-6-39. ரவீந்திரநாத தாகூர்"

ஆண்ட்ருசிடமிருந்தும் கடிதங்கள் வந்தன. சிலகாலம் கடுமையான நோய்வாய்ப்பட்டிருந்த பிறகு சென்னையில் ஒரு ஆரோக்கிய நிலயத்தில் அந்தச் சமயம் அவர் உடம்பைத் தேற்றிக்கொண்டிருந்தார். இந்த நிலையிலும் அவர் எனக்கு நீண்ட கடிதங்கள் எழுதுவார், எப்படி நாட்களை நான் கழித்தேன், எதிர்காலத்திற்கு எப்படித் திட்டம் போடப்போகிறேன் என்பதையெல்லாம் அறிய அவருக்கு ரொம்ப ஆவல் இருந்தது. நாங்கள் விடுதலை பெற்றதில்தான் அடைந்த மகிழ்ச்சியையும் அவர் எங்களுக்குத் தெரிவித்துக் கொண்டார்.

இந்த நாட்டின்மீதும், இந்நாட்டு மக்களின்மீதும் அவருக்கிருந்த அழுத்தமான பாசத்தை அவரது கடிதங்கள் காட்டின. ஒருதரம், அவர் கீழ்வருமாறு எழுதினர் :

"முந்திய பிறவியில் நீ எனக்குப் புத்திரியாய் இருந்தாய் என்று எண்ணத் தோன்றுகிறது. நான் முதுமையடைந்திருக்கும் இப்போது என் மகள் திரும்பவும் என்னிடம் வந்துவிட்டாள். சந்தர்ப்பம் நேரும்போதெல்லாம் இந்தக் கிழவனை நினைப்பதற்கு மறந்துவிடாதே."

நாங்கள் சிறையிலிருந்த காலத்தில் எங்களது விடுதலைக்காக மட்டும் இந்த புருஷோத்தமர்கள் கிளர்ச்சி செய்தார்கள் என்பதில்லை; நாங்கள் விடுதலையடைந்த பிறகும் எங்களுடைய நலனில் இவர்கள் அதே அளவு சிரத்தை காட்டினார்கள். விடுதலைபெற்ற பிறகு மனத்தில் ஒழுங்கும் அமைதியும் நிலவிய மனதுடன் நாங்கள் எந்த வழியில் செல்வது என்பதைத் தீர்மானிப்பதற்கு ஏதுவாக அவர் எங்களை ஆசீர்வதித்தார்கள்.

அவர்கள் எழுதிய கடிதங்கள் யாவும் இன்று என்னிடம் இல்லை, இந்தக் கடிதங்களையெல்லாம் ஒன்றுகூட பாக்கிவிடாமல் எனது தகப்பனுர் பத்திரமாகப் பாதுகாத்து வந்தார். அதிசயமான பக்தியுடன் அவைகளைப் பொக்கிஷப்படுத்தி வைத்தார். இரண்டு வருஷங்களுக்குமுன்பு எங்கள் குடும்பம் கல்கத்தாவுக்குக் குடிசென்ற காலத்தில், ரொம்பத் தேவைப்படக்கூடியது என்பதைத் தவிர மற்ற சாமான்களையெல்லாம் சிட்டகாங்கிலேயே விட்டுப் போகும்படி நேர்ந்துவிட்டது.

இந்த முறை, அந்தக் கடிதங்களை நான் திருப்பிச்சென்று தேடியபோது, ஒரு அறைக்குள் போட்டுப் பூட்டிவைத்திருந்த இந்தக் கடிதங்களையும் ஏனைய தஸ்தாவேஜுகளையும் கரையான் அரித்திருந்ததைக் கண்டேன். ரவீந்திரநாதரின் இரண்டு கடிதங்கள்தான் இவற்றில் உருப்படியாகத் தேறின.

ரவீந்திரநாதர் இன்று நம்மோடு இல்லை; மகா புருஷர் ஆண்ட்ரூசும் நம்மை விட்டுப் போய்விட்டார்.

"நாடு கடத்தப்பட்ட தனது புதல்வர்களின் பக்கத்திலேயே வங்க தேசம் நிற்கிறது" என்று அன்று ரவீந்திரநாதர் முழக்கினர்.

இந்த சம்பவத்திற்குப் பிறகு இன்று ஏழு வருடங்கள் கழிந்துவிட்டன. ஆயினும் அனந்த சிங்கும், அரசியல் சீர்திருத்தம் வழங்குவதற்குமுன் சிறை செய்யப்பட்ட இதர கைதிகளும் இன்னும் சிறைகளிலே வாடித்தான் வருகிருர்கள்.

நமது தலைவர்கள் அவர்களை மறந்திருக்கலாம், ஆனல் நமது ஜனங்கள் தங்களது வீரப்புதல்வர்களை இன்னும் ஞாபகம் வைத்துக்கொண்டுதான் இருக்கிருர்கள்.

எனவே, தோழர் நிரஞ்சன் சென் வங்காளத்திலுள்ள காங்கிரஸ், லீக், ஹிந்து மகாசபை, கிருஷக் பிரஜா கக்ஷி முதலிய ஸ்தாபனங்களின் தலைவர்களிடம் சென்று கைதிகளின் விடுதலைக் கோரிக்கையையும், கைதிகளுக்கு அவர்கள்முன் அளித்த வாக்குறுதியையும் ஞாபகமூட்டினர்.

அனந்த சிங், கணேஷ் கோஷ் ஆகியவர்களோடு வேலைசெய்தவர் தோழர் நிரஞ்சன்; அவர்களோடு சேர்ந்துதான் தோழர் நிரஞ்சனும் புரட்சி வாழ்க்கையை ஆரம்பித்தார், மேலும் எங்களுடைய தலைவர் சூர்யா சென்னுக்கு ரொம்பப் பிடித்த தோழரும் அவர்தான். வங்காள அவசரச் சட்டத்தின் கீழ் ரத்னகிரிச்

சிறையில் தலைவரைக் காவற்கைதியாக வைத்திருந்த காலத்தில், அதே சிறையில் தோழர் நிரஞ்சனும் இருந்தார். அங்கிருந்து விடுதலையானதும், மச்சுவா பஜார் வெடிகுண்டு வழக்கில் தண்டனை விதிக்கப்பட்டு, தோழர் நிரஞ்சனும் அந்தமானுக்கு அனுப்பப்பட்டார்; அந்தமான் சிறைக்காலம் முடிவுபெற்றதும், திரும்பவும் காவற்கைதியாக வைக்கப்பட்டார். 1937–38ல் தோன்றிய பிரசித்திபெற்ற விடுதலை இயக்கத்தின் விளைவாகவே அவருக்கு விடுதலை கிடைத்தது.

சிறையிலிருந்து வெளிவந்ததும், இன்னும் சிறையிலிருக்கும் தனது தோழர்களின் விடுதலைக்கான பணியில் அவர் ஈடுபட்டார். புரட்சி இயக்கத்தில் ஈடுபட்டிருந்தகாலத்தில் ஏற்பட்ட இடையூறுகளையும் இன்னல்களையும் அனுபவித்தபோதும், சிறைக்குள்ளே துன்பங்களை யனுபவித்ததிலும், போராட்டங்களை, நடத்தியதிலும் இணைபிரியாதிருந்து வாழ்ந்ததிலே அந்த தோழர்கள்மீது அவருக்கு இயல்பாகவே ஒரு அன்பும் மரியாதையும் ஏற்பட்டுவிட்டது. இப்படிப்பட்ட தோழர்கள் சிறையில் வாடுவதை அவரால் வெளியே வந்து சும்மா பார்த்துக்கொண்டிருக்க முடியுமா ?

அன்றிருந்து இன்று வரை அவர்களுடைய விடுதலைக்காக தேசமெங்கும் இயக்கத்தை ஆரம்பித்து வளர்த்துவதற்கு தோழர் நிரஞ்சன் ஓய்வு ஒழிச்சலின்றி பாடுபட்டு வருகிறார்.

இந்தச் சமயத்திலேதான், காந்திஜி விடுதலையடைந்தார்; காங்கிரஸ் கைதிகள் பலர் ஒருவர்பின் ஒருவராக சிறையினின்றும் வெளிவந்தார்கள். ஆனால் நமது தலைவர்களுக்கு சிறையிலிருந்து துன்புறும் நோற்கும் அந்த வீரர்களைப்பற்றிய ஞாபகமே இல்லை. மறந்து கைவிடப்பட்ட கைதிகளாகவே அவர்கள் இன்னும் இருந்து வருகிறார்கள்.

சமீபத்தில் அவர்களின் விடுதலைக்கான இயக்கத்தை திரும்பவும் விசைகொடுத்து முன்னேற்ற தோழர் நிரஞ்சன் முயன்றார். இந்த விடுதலை இயக்கத்தைத் துவக்கிய இடங்களிலெல்லாம் பொது மக்கள் அமோகமாக ஆதரவளிக்க ஆரம்பித்தார்கள். இந்த வீரர்கள்பால் பொதுமக்கள் வைத்திருக்கும் அன்பு எவ்வளவு என்பது இதிலிருந்து தெளிவாயிற்று. ஆனால் தலைவர்கள் விஷயத்தில் அப்படியல்ல.

தோழர் நிரஞ்சன் காங்கிரஸ் தலைவர் பிரபுல்லா சந்திர கோஷை அணுகியபோது, அவர்களை விடுதலை செய்விக்கும் சக்தி காங்கிரஸிடம் இல்லையே என்று கையை விரித்தார். இல்லை என்கிற இந்த உறுதியைத்தான் அவரால் அளிக்க முடிந்தது. உத்தி

யோக முறையில் காங்கிரஸ் தலைவராயிருக்கிற கிரன்சங்கர் ராயோ என்றால், வேவல் திரும்புகிற வரையில் ஒன்றும் நடக்காது; நம்பி யிருப்பதில் பயனில்லை என்று சொல்லிவிட்டார். "போஸ் காங்கிரஸை"ச் சேர்ந்த சந்தோஷ் பாபு கவர்னர்தான் அவர்களை விடுவிக்க முடியும் நம்மாலொன்றும் ஆகாது என்று கூறிவிட்டார். சியாமப்பிரஸாத் முகர்ஜியின் (ஹிந்து மகாசபை) ஆலோசனையின் மீதல்லாது, தான் இதில் ஒன்றும் செய்வதற்கில்லையென்று பஸ்லுல் ஹக் தனது விருப்பமின்மையைத் தெரிவித்தார். சியாமப்பிரஸாதோ என்றால் இதற்காகத்தான் ஒன்றும் செய்ய முடியாதென்று மறுத்துவிட்டார். நாஜிமுதீன், சுஹ்ராவர்தி போன்ற லீக் தலைவர்களும் வேவல்தான் ஏதாவது செய்ய முடியும் என்று வாளாவிருந்து விட்டனர்.

இது மட்டுமல்ல. வரப்போகிற தேர்தலில் சிட்டகாங்கின் செல்வப் புதல்வரான அனந்த சிங் சிட்டகாங் தொகுதிக்கு தேர்தலில் நிற்பதற்கு அனுமதி கோரினர். ஆனல் கவர்னர் அவருக்கு அனுமதியளிக்க மறுத்துவிட்டார். அவரது கோரிக்கையைக் கவர்னர் புறக்கணித்ததைக் கண்ட ஷ்யாமப் பிரஸாதின் பத்திரிகையின் "நாஷனலிஸ்ட்" "அனந்தசிங்குக்கு சர்க்கார் சூடு கொடுக்கிறது" என்று ஏளனத்தோடு குறிப்பிட்டது. சென்ற சில வருஷங்களாக தேசத்தில் ஏற்பட்டுவரும் நிகழ்ச்சிப் போக்குகளினல் நாம் எவ்வளவு ஈனநிலைக்கு வந்துவிட்டோம் என்பதைக் காட்ட இதை விட வேறு அத்தாட்சி வேண்டுமா?

இந்த வீரர்கள் தங்கள் வாழ்க்கையில் மகத்தான தியாகங்களைச் செய்தும், தங்களது வாழ்க்கையின் சிறந்த பகுதியைத் தேசசேவைக்கு அர்ப்பணம்செய்தும், இன்று தலைவர்கள் என்று சொல்லிக்கொள்ளுபவர்களைத் தலைமைப்பீடத்தில் அமர்த்தினர்கள். "வங்கத் தாயின் வீரப்புதல்வர்கள் விலையற்ற ரத்தம் தோய்ந்து புனிதமடைந்திருக்கும் இந்த வங்கத்தின் மண்ணின் மீது நின்றுகொண்டு, ஏளனத்திற்கிடமான இப்படிப்பட்ட தலைமைப்பதவியில் இன்னும் இருந்துவருவது உங்களுக்கு வெட்கமாக இல்லையா? என்ற ஒரே ஒரு கேள்வியை மட்டும் இந்தத் தலைவர்களை நான் இன்று கேட்க விரும்புகிறேன். கேட்காமல் விட, என் நெஞ்சு பொறுக்குதில்லையே!



# படித்துப் பார் !

கம்யூனிஸ்டு கட்சியின் பிரசுரங்களை படித்ததில்லையா ?

கீழ்கண்டவற்றை வாங்கிப் பாருங்கள் !!

| | | | | |
|---|---|---|---|---|
| காந்தி ஜோஷி கடிதப்போக்குவரத்து | ... | 0 | 8 | 0 |
| ஆறு கோடி தீண்டாதார் | ... | 0 | 3 | 0 |
| தேர்தல் கொள்கை | ... | 0 | 1 | 0 |
| தேசபக்தி வெல்லும், ரௌடித்தனமல்ல | | 0 | 1 | 0 |
| எந்தக் கட்சியில் ? | ... | 0 | 3 | 0 |
| முஸ்லிம் லீகை ஏன் ஆதரிக்கிறோம் ? | ... | 0 | 1 | 6 |
| சிட்டகாங் வீரர்கள் 1 | ... | 0 | 2 | 0 |
| ,, 2 | ... | 0 | 2 | 0 |
| ,, 3 | ... | 0 | 2 | 0 |
| ,, 4 | ... | 0 | 2 | 0 |
| ,, 5 | ... | 0 | 2 | 0 |
| இன்னும் சிறையிலே ! | ... | 0 | 2 | 0 |

---

*சீக்கிரம் கீழ்க்கண்ட புத்தகங்கள் வெளிவரும் :*

1. காங்கிரஸ் காரியக்கமிட்டியின் குற்றச்சாட்டுகளுக்கு கம்யூனிஸ்டுகள் பதில்.
2. ஜீவானந்தத்தின் வாழ்க்கை வரலாறு.

---